உ

# ஆஸ்திக
# விஞ்ஞானசாகரம்

அல்லது

## "கடவுளும் பிரபஞ்சமும்"

என்னும்

## துர்வாதத்திற்கு மறுப்பு.

திருவாரூர் விஜயபுரம்,
சர்வமத சகோதர சங்கத்தலைவரும்,
அத்துவைத கேசரியுமாகிய,
**ஸ்ரீ. பொ. சௌந்தராராஜம் பிள்ளை அவர்கள்**
இயற்றியது.



சென்னை
கந்தன் அச்சுக்கூடத்தில், பிரசுரிக்கப்பெற்றது.

இதன் விலை 1932. அணு 4.

திருவாரூர்-விஜயபுரம் சர்வமத சகோதர சங்கத் தலைவரும்,
சிறந்த அத்துவைதியும், இந்நூலாசிரியருமாகிய,

## ஸ்ரீ போ. சௌந்தரராஜம் பிள்ளை

*அவர்கள்மீது*

*விஜயபுரம், "கீர்த்தனைத்தினகரன்" ஸ்ரீ எஸ். ஆறுமுக கிணகர்*
*அவர்கள் இயற்றிய,*

# வாழ்த்துக் கமலபந்தனம்.



வெண்பா.

*போதமுத மோதப் பூரணகத் தன்புறைய*
*வேதமொழி ஓதிதந்த வீதனே—சாதுகுணம்*
*நிறையுசவுந் திராஜ நிட்களனே நீடூழி*
*தறைதுதிய வாழ்கவே தாம்.*

# MESSAGE OF SRI RAMAKRISHNA.

Know yourself and you shall then know God. What is my ego? Is it my hand or foot or flesh or blood or any other part of my body? Reflect well and you will know that there is no such thing as "I." The more you peel off the skin of an onian the more skin only appears,—you cannot get any kernel; so when you analyse the ego, it vanishes away into nothingness. What is ultimately left behind is the Atman (soul) the pure Chit (Knowledge Absolutue). God appears when the ego dies.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரின் செய்தி.

---

### நான் என்பது யாது?

உன்னை நீ அறிந்து கொள்! அப்பொழுதுதான் நீ கடவுளை அறிவாய்! "நான்" என்பது யாது? என்னுடைய கையா? காலா? தசையா? உதிரமா? அல்லது என் சரீரத்தில் வேறு ஏதாவதொரு அவயவமா? நன்கு ஆலோசித்துப்பார். நான் என்ற பொருள் ஒன்றில்லை என்பதை நீ அறிந்து கொள்வாய். வெங்காயத்தின் தோலை உரிக்க உரிக்க மென்மேலும் தோல்தான் காணப்படும். விதையொன்றும் உனக்குக் கிடைக்காது. அதுவேபோல், நான் என்பது யாது"? என்று ஆராயப்புகின் அது இருக்குமிடம் இல்லாது மறைந்துபோம். கடைசியாக எஞ்சி நிற்பது ஆத்மா-சைதன்யம். "நான்" என்னும் அகங்காரம் அழியும்போது கடவுள் தோன்றுகிறார்.

# நூன்முகம்.

கடந்த சில வருடங்களாக இத்தமிழ் நாட்டெல்லையில் சுயமரியாதை என்னும் பெயரால் ஓர் இயக்கம் தோன்றி ஆரம்பத்தில் சமூக சீர்திருத்தம் செய்வதைப் போல் நடித்து, இறுதியாக நாஸ்திகத்தில் இயங்கி வருகிறது. இவ்வியக்கத்தில், மேல்நாட்டு ஜடதத்துவக் கலைகளை ஆராய்ந்தறிந்த ஆராய்ச்சியாளர் அபிப்பிராயத்துள் மூழ்கிய பலர் ஈடுபட்டு, நாஸ்திகக் கொள்கையைப் பாமர மக்களிடைப் பரப்பி வருகின்றனர். அவர்களுள் சென்னை மயிலை-ம. சிங்காரவேலு என்பார் "கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் ஓர் நூலை வெளியிட்டிருக்கிறார். பகுத்தறிவு சங்கத்தைச்சேர்ந்த "கோகன்" என்ற மேல்நாட்டுப் பெரியார் எழுதியுள்ள அபிப்பிராயத்தையனுசரித்தே "கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலை இயற்றி வெளியிட்டுள்ளதாக நூன்முகத்தில் அந்நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். அந்நூலுக்கு, நட்சத்திரங்களும் அணுக்களும், குழப்பத்திலிருந்து ஒட்டம், நம்மை சுற்றியுள்ள பிரபஞ்சம்; கடவுளும் பிரபஞ்சமும், பிரபஞ்ச உயிர், அணுக்களும், மூலவஸ்துக்களும், அணுக்களுக்கப்பால்; வானஞானமும், பிரபஞ்சஞானமும், பூர்வ மனிதநூல், பொன்கிளை; மனிதனும் கடவுளும்; நித்திய வாழ்வும் நடத்தையும் முதலிய நூற்களினின்று ஆதாரங்களும் எடுத்தாளப் பெற்றிருக்கின்றன. மேல்நாட்டு ஜடதத்துவ ஆராய்ச்சியாளர்களின் அறிவிற்கு ஐக்கியமாகி, கீழ்நாட்டுப் பரம்பரை ஆத்மதத்துவ, ஜடதத்துவ ஆராய்ச்சிகளைக் குறைகூறுவதோடில்லாமல், "கடவுள்" என்று கீழ்நாட்டார் எவ்வளவோ காலத்திற்குமுன் தங்கள் அநுபவத்தில் அறிந்துணர்ந்த ஆத்மதத்துவ அநுபவ முடிவுகளாகிய வேதாந்த சிகரங்களையும் தகர்க்க ஆரம்பித்துவிட்டனர். சகல கலைகளிலும் சிறப்புற்று விளங்கிய இவ்விந்தியாவில், பல்லாயிர ஆண்டுகளாக கணக்கற்ற மகாத்மாக்கள் தோன்றி தங்களின் அநுபவஞான சிதறுகளை சகல நாட்டினரும் பயன்படுத்திக்கொள்ளுமாறு உதவினர். அவைகளைக் கொண்டு

போய் அயல்நாட்டினரும் அனேக தத்துவக் கலைகளை யடைந்து மேன்மையுற்றனர்—இதுபோதும் மேன்மை யுற்று வருகின்றனர். இந்நிலை யடைந்திருந்த நம் இந்திய மக்களுக்கு, மேல்நாட்டு ஜடதத்துவ ஆராய்ச்சியாளர் அபிப்பிராயத்தைக்கொண்டு அறிவுப்புகட்ட பகுத்தறி வாளர் என்று சொல்லிக்கொள்ளும், நாஸ்திக சுயமரியா தைக்காரர்கள் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம், இந்தியா வின் தற்கால கல்வி முறையும், அதன் பயனாய் ஏற்பட் டுள்ள அடிமை நிலைமையுமேயாகும் எனக் கொள்வது பொருந்தும். நம் இந்தியர், பாரம்பரை வாசனையால், இக் காலத்தில் அறியாமையாலேற்பட்ட அடிமைச் சங்கிலி யைத்தகர்க்க அரும்பிரயாசைப்பட்டு வருவது உலகறிந்த உண்மை. இந்நிலைமையில் பாமரமக்களிடை நாஸ்திக மும் பரவவிடுவோமாகில், நம் இந்தியா அடிமையிலிருந்து விடுபட பலநூற்றாண்டுகளுக்கு இடம் கொடுத்தவர்களா வோம். ஆகையால் மக்களிடை இந்நாஸ்திகம் பரவ விடாது வேருடன் களையவேண்டியது அறிஞர் ஒவ்வொரு வரின் முக்கிய கடமையாகும். எனவே, "கடவுளும் பிர பஞ்சமும்" என்ற நாஸ்திக நூலுக்கு சமாதான முறையி லும், அந்நூலாசிரியர் ஆதாரமாகக்கொண்ட மேல்நாட்டு ஜடதத்துவ ஆராய்ச்சியின் அபிப்பிராயப் பிசகை எடுத் துக்காட்டும் துறையிலும், கீழ்நாட்டு அறிஞர்களின் மனோ தத்துவ பகுத்தறிவின் மேன்மையைப் பிரத்தியட்ச பிர மான அநுபவ வாயிலாக நிரூபிக்கும் முறையிலும் "ஆஸ் திக விஞ்ஞான சாகரம்" என்னும் இச்சிறு நூலை வெளி யிட்டு, இதனை தமிழ் மக்களின் இதய கமலங்களில் சமர்ப் பிக்கின்றேன்.

இங்ஙனம்,

விஜயபுரம்,
17—10—1932.

**பொ. சௌந்தரராஜம் பிள்ளை,**
**தலைவர், சர்வமத சகோதர சங்கம்.**

# ஆஸ்திக விஞ்ஞானசாகரம்.

## முதல் அத்தியாயம்.

### எங்கும் கடவுள் தங்குமிடம்.

"கடவுளும் பிரபஞ்சமும்" என்ற நூலின் முதலாவது அத்தியாயத்தில் "கடவுள் தங்குமிடம் எது?" என்ற தலைப்பின்கீழ் காணப்படும் பிரச்னைக்கு சமாதானமாக "எங்கும் கடவுள் தங்குமிடம்" என்னும் தலைப்பீய்ந்து விவரணத்திற் புகுகின்றோம்.—

"நாளதுவரை தெரிந்துள்ள பிரபஞ்சத்தில் எங்கேயாகிலும் கடவுளுக்கு இடமுண்டா என்று வான ஆராய்ச்சிகாரர் ஆராய்ந்தும் எந்தப் பிரபஞ்ச மூலையிலும் கடவுளைக் காணவில்லை என்றும் பிரபல நூலாசிரியராகிய (Sir James Jeans) சர். ஜேம்ஸ் ஜீன்ஸ் என்பார் தனது நூலாகிய பிரபஞ்சவான நூலில் (Cosmogony and Astronomy) இப்பூமியிலாவது, மற்ற பிரபஞ்சத்திலாவது சைதன்யம், அதாவது மனம், அல்லது ஜீவன் உண்டென்பது சந்தேகமென்கிறார் என்றும், மதக்கர்த்தாக்களும், தத்துவஞானிகளும் கூறும் பிரமம் சத்து, சர்வம், எண்ணம், இச்சை முதலிய யாவும் கற்பனை வார்த்தைகளென்றும், நமது பூமிக்கு சமீபத்துள்ள நவக்கிரஹங்களைப்பற்றியும் அவைகளின் சீதோஷ்ண ஸ்திதிகளைப்பற்றியும்கூறி அக்கிரகங்களில் பரமாணுக்கள்கூட தங்க இடமில்லை என்றும் அவ்வாறாயின் கடவுள் தங்குவதற்கு இடமேதென்றும்"

இன்னும் பலவாறு முதல் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. அண்டத்தில் இயங்கிக்கொண்டிருக்கும்

கோளங்களையும், நவக்கிரக மென்பவைகளையும் ஆராய்ந்த மேல்நாட்டு நிபுணர்கள், கடவுளைப்பற்றிய உண்மைகளை கண்டுணர ஆவல்கொள்ளவில்லை. தங்கள் தங்கள் காலத்தில் இன்னின்ன கிரகங்களை புதிதாய் கண்டுபிடித்தோம் என்ற பெருமையடையவே, மேல்நாட்டினர் வான ஆராய்ச்சியில் தலைப்பட்டார்கள். அவர்கள் கண்டுபிடித்தவை அனைத்தும் கண்டுபிடிக்க பிரயத்தனப்படுபவைகளும் எத்தனையோ ஆயிர வருடங்களுக்குமுன் கீழ்நாட்டு மனோ தத்துவ சாஸ்திரிகளால் கண்டுபிடிக்கப்பட்டு அதற்கு அளவுகளும் அதில் வசிக்கும் ஜீவராசிகளின் சரீர அமைப்பு பாகுபாடுகளும் அவைகளின் இயக்கம் கதி கிரகங்களில் ஒவ்வொன்றிற்குமுள்ள தொடர்பு இவைகளும் புராண இதிகாசங்களில் கதாரூபமாக தொகுத்து கூறப்பட்டிருக்கின்றன. அவர்கள் இத்திருசியமாகிய இப்பிரபஞ்சத்திற்கு காரணமாகிய பிராணசக்தி, ஆகாயம், அதினின்று பஞ்சபூதங்கள், பஞ்சபூதங்களின் பஞ்சீகரணத்தால் சர்வாண்டங்கள், அவற்றிலுள்ள பருவதங்கள், அகன்ற ஆறுகள், மலைகள்போல் எழும்பி கர்ஜிக்கும் சமுத்திரங்கள், தாதுவர்க்கங்கள், கந்தமூலாதிகள், ஊர்வன, கிருமி, கீடாதி, பக்ஷி மிருக மனுஷவர்க்க முதலியவைகளின் தோற்ற ஒடுக்கங்கள் இவைகளைப்பற்றியும் கூறியிருக்கின்றனர். பூ தத்துவ, வான தத்துவ நூல்களை யோதினோமென்ற பெருமைகொண்ட மேல்நாட்டு கொள்கையை பின்பற்றிய நம்மனோர்களில், பலர் இப்பிரபஞ்சத்தைப் பற்றி கூறும் மதநூல்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசப்படுவதால் அவைகள் வெறுங் கட்டுக்கதைகள் என்றும், பரமாணுத் திரள்களின் பெருக்கே இப்பிரபஞ்சமென்றும், பஞ்ச பூதங்களினின்றும் (**Oxygen**) பிராணவாயு (**Nitrogen**) உப்பு, வாயுவாதிகளின் தூண்டுதலினால் ஆதியில் தாதுவர்க்கமும், பிறகு கந்தமூலமும், கிருமிகீட வண்டுகளாதிய பறவைகளும், ஜனித்து அவைகள் யாவும் மாண்டு மண்ணாகி, அந்த மண்ணிலிருந்த பிராணவாயு மலைகளிலும் கற்களிலும் பாறைகளிலும் மோத அக்கற்கள், மான், கரடி, யானை, ஒட்டகங்களாகி, அவைகள் யாவும் மறித்து மண்ணாகி நசித்து ஓர் பெருமழையினால்

அப் பிராணவாயுவின் அம்சங்கள் அடித்துக்கொண்டு போகப்பட்டு அலைகடலில் விழ, அவைகள் மீன்களாகி அம்மீன்கள் பாசி முதலானவைகளை உண்டு மாண்டு அவைகளின் சத்தினால் ஒருவித காலும், வாலுமுள்ள பிராணிகளாகி நாளாவட்டத்தில் குரங்குகளாகி, அவைகள் நாளாவட்டத்தில் குளிருக்கும் காய்ச்சலுக்கும் கிளைகளில் பதுங்கி அறிவு பெற்றவையாகி முடிவில் அவ்வாலில்லாக்குரங்குகளே மனிதர்களாகியிருப்பது சுபாவமேயன்றி கர்த்தா தேவையில்லை என்றும் அபிவிருத்தி கொள்கைக்காரர்கள் கூறுகிறார்கள்.

சுபாவமென்பது இயல்பு என்ற பொருள்படும். இயல்பாக ஒன்று ஏற்பட்டுவிடின் அது மீண்டும் மீண்டும் மாறி வேறு ரூபத்தையும், வேறு குண, கர்ம, தன்மையையும் அடைவானேன்? பிராணவாயு, உப்பு வாய்வு முதலியன சேதனமில்லாத ஜடவஸ்துவென்றும், இயற்கையென்றும் கூறும் இவர்களின் கொள்கைப்படி ஒன்றையொன்று தூண்டும் சக்தி ஜடவஸ்துவிற்கு எங்கிருந்து ஏற்பட்டது? அவ்வாயுக்கள் தாக்குதல்களினால் ஆதியில் தாதுவர்க்கங்களும், படிப்படியாகமாறி இறுதியில் மனுஷர்களாகப் பரிணாமமடைந்தார்கள் என்பது கிரமமானால் தாதுவர்க்க முதல், மனுஷர் வரையிலுள்ள குண, கர்ம, ரூப, பீஜங்கள் ஆதியிலேயே அவ்வாயுக்களில் அந்தர்கதமாக இருந்திருக்க வேண்டுமல்லவா? காரணத்திலில்லாத அவயவ, குண, கர்ம தன்மைகள் காரியத்தில் பிரதி பலிக்காதன்றோ? படிப்படியாய் தோன்றிய தாதுவர்க்கமுதல் மனுஷர் வரையிலுள்ள உற்பவங்கள் இக்காலத்தில் படிப்படியாயின்றி எங்கும் நடைபெறுவதற்கு காரணமென்ன? சர்வ உற்பவங்களும் நடந்துகொண்டே யிருப்பதால் படிப்படியாய் தாதுவர்க்க முதலியவற்றின் உற்பத்தி கூறிய கொள்கை முற்றிலும் பிசகென்று ஏற்படுகிறது. இம் மனுவர்க்கம் நசித்தபின், எந்த குண, கர்ம தன்மையுடைய ரூபத்தை இந்த ஜீவர்கள் அடைவார்களென்பதை இன்னும் இம்மேனாட்டு அறிஞர்கள் கண்டுபிடிக்கவில்லைபோலும். மேல்நாட்டு கொள்கையில் மூழ்கிய இன்

னும் சிலரோ கூறுவது யாதெனில், பரமாணுக்களாகிய பிரபஞ்சமும் சூரிய சந்திராதி கிரகங்களும் ஒன்றுக்கொன்று இழுப்பு கவர்ச்சி ஒட்டக்கவர்ச்சிகளால் பந்தப்பட்டு சுழல்வதாயும், இப்படி சுழல்வதால் சூரிய கிரகத்திலிருந்த ஜீவசத்துகள் குறைந்து போனதாயும், அப்படி குறைவதால் மரங்கள் மிருகங்கள் மனுஷ ராசிகளுக்கு வளர்ச்சியும் வாழ்க்கையும் குறைந்துபோய் பெருவிரல் பருமனாகி விட நேருமென்பதாயும் இந்த கிரகங்களின் சுழற்சியில் கிரகங்களின் ஜீவசத்து குறைந்து நமது உலகமும் சூரிய சந்திராதி கிரகங்களும் கடல் நுரைபோன்ற தக்கையாகி விடுமென்பதாயும் இப்படியாதல் சுபாவமென்றும், கர்த்தா செயல் அல்லவென்றும் கூறுகிறார்கள். ஆதியில் நமது பூமிக்கும் சூரிய சந்திராதி கிரகங்களுக்கு மிருந்த ஜீவ சத்து நாளடைவில் குறையக் காரணமென்ன? அதற்கு சுபாவமென்று கூறிவிட்டார்களே ஒழிய உண்மை காரணத்தை கண்டுபிடிக்க இம்மேனாட்டு அறிஞர்களுக்கு முடியவில்லைபோலும். அண்டகோளங்களில் இயங்கிக் கொண்டிருக்கும் கோளங்கள் இழுப்பு கவர்ச்சி சக்திகளால் ஒன்றை ஒன்று சுவீகரித்துக்கொண்டு பல கோளங்கள் அவ்யக்தப்பட்டு வேறோர் பக்கத்தில் மீண்டும் வியக்தமாகிறது. இதைத்தான் இந்து சாஸ்த்திரங்களில் பிரபஞ்சத்தின் அவ்யக்தம், வியக்தம் என்று கூறுவது. ஒன்றினின்று ஒன்று தோன்றுவதும் ஒன்றினுள் ஒன்று ஒடுங்குவதுமான செயல்கள் கிரமப்படி நடப்பதற்கு ஜீவாதாரமான சக்தி ஒன்று வேண்டுவது அவசியமல்லவா? அச்சக்தி யாது என்று மேனாட்டார் இன்னும் கண்டுபிடிக்கவில்லை. இப்பிரபஞ்சம் நம்மாலும் யாதாமொரு கர்த்தாவாலும் சிருஷ்டிக்கப்படாமலுமிருக்கில், இது தனக்கு தானாகவாகிலும் சிருஷ்டித்துக் கொண்டிருக்கவேண்டும். அது சாத்தியமோவென்று பார்க்குமிடத்தில் யுக்திக்கு பொருந்தவில்லை. இவ்வுலகம் தனக்குத்தானே சிருஷ்டித்துக்கொள்ளுமாகில் முதலில் அது தோன்றாமல் எப்படி வேறு உலகை சிருஷ்டிக்க முடியும்? சேதனமற்ற ஜடத்துவம் வாய்ந்ததென இவர்கள் கூறும் இப்பிரபஞ்சம் தனக்குத்தானே சிருஷ்டித்துக் கொள்ளுமாகில் மண்,

குயவன் இன்றியே மட்குடம் சிருஷ்டியாகும் கதையை யொத்திருக்கிறது.

"கடவுளும் பிரபஞ்சமு"மென்ற நூலாசிரியர் கீழ் நாட்டு அறிஞர்களுள் வேதாந்திகள் கூறும் கடவுள் இலக்கணத்தை உணராது கடவுளை ஆன்மா, பிரமம், சிவன், விஷ்ணு, பிர்மா, தேவர்கள், இருளன், வீரன், நொண்டி, சாமுண்டி முதலியவைவென்றும் அவைகள் கற்பிதமென்றும் கூறுகிறார்.

வேதாந்திகள் கடவுளை பிரஹ்மம், ஆன்மா, ஜீவன், பிரஞ்ஞானம் என்றும் கூறுகிறார்கள். அச்சொற்றொடர்களுக்கு பொருள் யாதெனில், சச்சிதாநந்த பரிபூரண வஸ்து என்பதாகும். இக்கருத்தை உணராது வான சாஸ்திரிகள் தங்கள் ஆராய்ச்சியில் கடவுளைகாண முடியவில்லை யென்று கூறுகிறார்கள். சர்வ பிரபஞ்சத்திலும் கடவுளின் சர்வ பரிபூரணத் தன்மையை கீழ்நாட்டறிஞர்கள் கண்டிருக்கிறார்கள். அதிலும் வேதாந்திகள் சர்வ பிரபஞ்சத்திலும் நாமரூபமற்ற சத், சித், ஆநந்த, வியாபகத்தை கடவுளாக உணர்ந்தார்களேயன்றி நாமரூபமுடைய சிவன், பிர்மா, விஷ்ணு, தேவர்கள், காளி, கூளி, சாமுண்டிகளை பரபிரமமாக உணரவில்லை. வேதாந்திகள் பூர்வ பக்ஷம் செய்த நாம, ரூப, கற்பனைகளை சித்தாந்தமாக கருதி மக்களின் மனோநிலையை மயக்குவது அறிவுடைமையாகாது.

மேலும் அந்நூலாசிரியர் "உலகினுள் உள்ள சகலமும் மண்ணுகவே முடிவதாய் ஏற்பட்டு நமது உலக மண்ணில் எங்கேயாகிலும் கடவுள் என்ற பொருள் தங்கிவாழ இடமுண்டா?" வெனவும் கேட்கிறார். சகல உயிர்களும் மண்ணுகவே முடிந்துவிடுகிறது. உயிர்கள் முடிவடைந்த அம்மண்ணினின்றே சகல கந்தமூலாதி கிருமி கீட பக்ஷி விலங்கு மனுக்களாதியன தோன்றுவதை பிரத்தியட்சமாய் பார்க்கிறோம். அம்மண்ணினுள் அக் கந்த மூலாதி மனுக்களின் தோற்றங்களின் பீஜம் அநுகூதமாய் தங்கி இருக்க இடமிருக்கும்போது கடவுள் என்ற ஜீவ சக்தி வியாபித்து தங்கியிருக்க ஏன் இடமில்லாதுபோகும்?

நாம் இப்பூமியை மண் ரூபமாகவே பார்க்கிறோம். அப்படி யிருக்க மண்ரூப மல்லாத கிருமி கீடம் முதலிய மனு வர்க்கங்கள் இம் மண்ணினின்று உற்பத்தியாவது நியதி விரோத மல்லவா? அப்படி உண்டாவதற்கு மேல்நாட்டறிஞர்கள் என்ன நியாயம் சொல்லுகிறார்களோ? இம் மண்ணுள் கடவுளுக்கு இருக்க இடமில்லாத கொள்கை யின்படி இந்த ஜீவர்களுக்கு மண்ணில் உதிக்க எப்படி இடமுண்டாயிற்றென்று ஏன் ஆராய அறிவு ஏற்பட வில்லை? இம்மண்ணினும் வேற்றுமையுற்ற ஜீவர்கள் மண் ணல்லாத நாமரூபத்துடன் மண்ணில் தோன்றும்போது நாம் ரூபாதீத சத்தாஸ்புரண மேலான சக்தி ஏன் இம் மண்ணுள் வியாபித்திருக்காது? பிரத்தியட்சத்தில் பார்க்க வில்லையே யென்று ஓர் வாதம் கூறுவார்களாயின் மண் ணில் பிரத்தியட்ச மில்லாத மனுவாதி தோற்றங்களை மண்ணுக்கு வேறாக உணர்ந்து ஏன் அனுபவித்து வரவேண் டும்? மேல் நாட்டினர் மண்ணுக்குள் மனுவாதி வர்க்கம் அநுசூதமா யிருப்பதை தங்கள் அநுதிருஷ்டி முதலிய உபகரணங்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. எத்துணை யோ நூற்றூண்டுகளுக்கு முன்பே கீழ்நாட்டறிஞர்கள் காரியமாகிய திரிசியத்தின் சூட்சம பீஜம், காரணமாகிய பிரமத்தில் அவ்யக்தமாயிருந்த தென்பதை கண்டுணர்ந் திருக்கிறார்கள். அவ்வுண்மைகளை பழைய அறிஞர்களின் அனுபவங்களாகிய உபநிடதங்களில் உணரலாம். வேதா ந்த கொள்கைகளை மேல்நாட்டிலே பிரசங்கித்து இந்து மதத்திற்கு அழியாப் பெருமையை யுண்டு செய்த சுவாமி விவேகாநந்தர் 1896ஆ ஜனவரிமீ 19உ நியூயார்க்கில் (New York) செய்த பிரசங்கத்தில் மேல்நாட்டு அபி விர்த்திக்காரர் கொள்கையை கண்டித்து கூறியிருப்பதை ஈண்டு குறிப்பிடுகின்றோம். "விருக்ஷம் வித்திலிருந்து உண் டாகிறது. மறுபடியும் வித்துக்குச் செல்லுகிறது. ஆதி யும் அந்தமும் ஒன்றே. பூமி அதன் காரணத்திலிருந்து உண்டாகி அதற்கே திரும்பிச் செல்கிறது. நாம் ஆதி யைக் கண்டு பிடிக்க முடியுமானால், அந்தத்தையும் கண்டு பிடிக்க முடியுமென்று நாம் அறிகிறோம். அதே மாதிரி நாம் அந்தத்தைக் கண்டுபிடிக்க முடியுமானால் ஆதியையும்

கண்டுபிடிக்கமுடியும். அது அப்படியானல், ஒரு முனையிலே கருவிலிருந்து மறு முனையிலே பரிபூரண மனிதன் வரையிலுமுள்ள இந்த அபிவிர்த்தி தொடர்ச்சி முழுதும் ஒரே ஜீவிதமாம். முடிவிலே நாம் பரிபூரண மனிதனை காண்கிறோம். அதுபோலவே ஆதியிலும் அப்படியேயிருந்திருக்க வேண்டும். ஆகையால் பிபீலிகையே மிக சிரேஷ்டமான அறிவின் அந்தர் விர்த்தியாயிருந்தது. நீ அதைப் பாராமலிருக்கலாம். ஆனல் அந்த உள்ளடங்கிய அறிவுதான் பரிபூரண மனிதனிடத்திலே வெளிப்படுகிற வரையில் அடங்கியிருப்பதாம். அது கணித பூர்வமாக ருசுப்படுத்தப் படக்கூடும். சக்தியை சேர்த்து வைத்ததலாகிய நியதி உண்மையானல், நீ யொரு யந்திரத்தினுள்ளே முதலில் எதையாவது வைத்தாலொழிய அதிலிருந்து எதையும் எடுக்கமுடியாது. இப்பிரபஞ்சகனத்திலே ஒரு அணு ஜடமாவது அல்லது ஒரு பவுண்ட் சக்தியாவது சேர்க்கப்படவும் முடியாது; அல்லது எடுக்கப்படவும் முடியாது. அது அப்படியானல் இந்த அறிவென்பது என்ன? அது கருவிலே இல்லாதிருந்தால் திடீரென்று உண்டாயிருக்க வேண்டும். பாழிலிருந்து ஒன்று உண்டாகிறதென்று சொல்வது சுத்த மூடத்தனம். பிரகிருதி நியதிகளுக் கப்பால் சென்றுவிட்டவனும், எல்லாவற்றையும் கடந்து விட்டவனும், இந்த அபிவிர்த்தி முறையினூடே—ஜனன மரணத்தினூடே செல்ல வேண்டாதவனுமாகிய பரிபூரண மனிதன் முக்த புருஷன். ஈஸ்வர புருஷன் கிறிஸ்துவர்களாலே கிறிஸ்துவென் றழைக்கப்பட்ட அந்தப் புருஷன், பௌத்தர்களாலே புத்தர் என்றழைக்கப்பட்ட அந்தப் புருஷன், யோகிகளாலே முக்தனென் றழைக்கப்பட்ட அந்தப் புருஷன், அபிவிர்த்தி சங்கிலியின் ஒரு முனையிலேயுள்ள அந்தப்புருஷன், அதே சங்கிலியில் மறு முனையிலுள்ள கருவாம் அறையிலே அடைக்கப்பட்டிருந்தான்" என்று கூறியிருக்கிறார்.

"இப்பிரபஞ்சத்தின் மத்தியில் எங்கோ ஓர் மூலையில் நாம் உற்பத்தியாகி அற்பநாள் வாழ்ந்து, வாழ்ந்துவந்த இடமும் போன இடமும் தெரியாமல் மறைந்து போகிறோம். இந்த சந்தர்ப்பத்தில் நமது சொற்ப வாழ்வுக்கு வேண்டிய விஷயங்

களைக் கருதாது, கடவுளென்றும் பேய் பிசாசுகளென்றும் வியர்த்தமானவைகளை கற்பித்துக்கொண்டு கோடான கோடி மக்களை மூட நம்பிக்கையி லாழ்த்தும் சூழ்ச்சிகளை வெறுக்காத உத்தமன் எங்குமில்லையா? இதனை நமது தமிழ்நாட்டிலிருக்கிறவர்கள் ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டுகிறோம்"

என்பது கடவுளும் பிரபஞ்சமும் என்னும் நூலாசிரியர் கூற்று.

அற்ப நாள் வாழும் இவர்களுக்கு இப்பிரபஞ்சத்தில் பற்றுதல் எதற்கு? கோடான கோடிமக்களின் ஜீவிய பயன்களை உரிந்து மாடமாளிகைகளும், உத்தியான வனங்களும் ஆடம்பர வாழ்க்கை சாதனங்களும் அமைத்துக்கொள்ள ஏன் முற்படவேண்டும்? மக்களின் அறியாமையை அகற்றி ஞான ஒளி பிரகாசிக்கச் செய்யவே, வேதாந்தப் பேரொலி கீழ்த் திசையில் அநேக ஆண்டுகளுக்குமுன் தோன்றியது. அற்ப தூசுகளின் சையோகம் என்று பாவிக்கும் மனிதன், ஏன் சுயமரியாதையைப் பிறரிடமிருந்து யாசிக்கவேண்டும்? இந்நாஸ்திக கொள்கையை தொன்றுதொட்டே வெறுக்கும் உத்தமர் அநேகர் உளர். இதனை தமிழ்நாட்டறிஞர்கள் ஒவ்வொருவரும் கவனித்து உண்மையை கடைபிடித்தொழுக வேண்டுகிறோம்.

---

## இரண்டாவது அத்தியாயம்.

---

### கடவுளைப்பற்றி வேதங்களில் கூறும் பொறுத்தங்கள்.

தமது நூலின் இரண்டாவது அத்தியாயத்தில் "கடவுளும் பிரபஞ்சமும்" என்ற நூலாசிரியர் "கடவுளைப்பற்றி கூறும் பொருத்தமற்ற கூற்றுகள்" என்ற தலைப்பின் கீழ் கூறுவதாவது:—

"கடவுள்" என்ற பதத்திற்கு கொடுத்துவரும் பொருள்களுக்குக் கணக்கேயில்லை. வேதத்தில் கூறுவது ஒன்று உபநிடதத்தில் கூறுவது வேறொன்று; புராணம்கூறுவது மற்றொன்று. புத்தர், கிறிஸ்தவர் கூறுவது வெவ்வேறு. உபநிஷத்துக்

களில் கடவுளை ஸ்பரிசிக்கவும் நுகரவும், பார்க்கவும், கேட்கவும், ருசிக்கவும் முடியாவாம். சிறிதிற்கு சிறியதாம் பெரிதிற்கு பெரியதாம், வியாபகமாம், காற்றால் அசைக்கப் படாதது ஜலத்தில் நனைக்கப்படாதது, நெருப்பால் தஹிக்கப்படாதது, நித்யம், நிர்மயம், நிர்சூன்யம், அகண்டம், பரிபூரணம். மனதிற்கும், எண்ணத்திற்கும் எட்டாதவை என்று உபநிஷத்துக்களில் கூறப்பட்டிருக்கிறது. இத்தகைய பொருளுள்ளதை என்னவென்று தெரிந்துகொள்வது, என்ன பொருள் கொள்கிறது இவ்வித வியாக்கியானக் காரர்களுக்கு தெரிந்ததென்ன ? கிறிஸ்துவர்களோ கடவுள் சகலத்தையும் படைத்வர் என்றும் பிதாவென்றும் கூறுகிறார்களே யன்றி தெளிவுபடக் கூறக்காணோம். குயவன் பானையை செய்த மாதிரி செய்தானா ? நம்மை பெற்ற தாய் தகப்பன்மார்களைப் போன்று உலகைப் பெற்றானா ? என்று கேட்டால் தெரியாதென்கிறார்கள். தங்கள் சுருதியைப் பிரமாணமாகக் காட்டுகிறார்கள்.”

கடவுள் என்பது பொருளேயன்றிப் பதமன்று. கடவுள் என்ற பொருளுக்கு கொடுத்துவரும் பெயர் பதமேயன்றி பொருளன்று. பதத்திற்கும் பொருளுக்கும் இலக்கண முணராதவர், மக்களுக்கு நாஸ்திகம் புகட்ட வந்தது அறியாமையேயாகும். வேதம் என்பதும் உபநிடதம் என்பதும் ஒரே விஷயத்தைக் காட்டும் வாசகமாம். வேதத்தில் கூறுவது ஒன்றும் உபநிடதத்தில் கூறுவது வேறொன்றுமாக எப்படி யிருக்கக்கூடும்? வேதம் உபநிடதம் இன்னதென்றுணராதவர்களுக்கு வேதத்தைப் பற்றி நிரூபிக்கவேண்டியது கடமையாகும். வேதத்தில் கூறும் உண்மைகள் அபௌர்ஷேயம் அதாவது ஒருவரால் உண்டுபண்ணப்படாதது என்பதாம். இதைப்பற்றி சிகாகோ பிரசங்கத்தில் சுவாமி விவேகாநந்தர் கூறியிருப்பதை நேயர்களுக்கு நினைப்பூட்டுகிறோம். “ஹிந்துக்கள் வேதத்தால் அருளப்பட்ட மதத்தை கைகொண்டவர்கள். வேதம் ஆதியந்தமற்றது என்பது அவர்களுடைய கொள்கை. வேதமென்பது யாதொரு நூலையும் குறியாது. பலபேர்கள் பற்பல காலங்களில் கண்டுபிடித்த ஆத்மஞான விதிகள் நிறைந்த பொக்கிஷமென்பதே அதன் கருத்து. பொருள்களின் ஆகரஷணா; பிரதிகர்ஷண சக்திகளுக்குரிய

நித்திய சம்பந்த விதிகளானது மனிதனால் கண்டுபிடிக்கப் படுமுன் இருந்ததோடுகூட அவர்களால் இனி மறந்து விடப்படினும், எப்படி யிருந்துகொண்டே யிருக்குமோ, அதுபோல் ஆத்ம ஞானத்திற்குரிய விதிகளும் இருப்ப வையேயாகும். அவைகள் நாம் கண்டுபிடித்ததற்கு முன்பு மிருந்தன. இனி நாம் மறந்துவிட்டாலும் அவைகளிருப் பனவேயாகும்." வேதத்திலும் ஞானம், கர்ம, உபாசனா காண்டமென மூன்று பிரிவுகளுண்டு. ஞானகாண்டம்தான் வேதத்தின் முடிவு. அதற்குத்தான் வேதாந்தமெனப் படும். அவ்வேதாந்தமெனும் இறுதியான தத்துவங்க ளின் கருத்துக்களையே அந்வயப்படுத்திக்கொண்டு, கர்மம், உபாசனை நியதிகள் முதலியன ஏற்படுத்தப்பட்டன. அதற்கு எதிர்மறையான நியாயங்கள் புகுந்த கர்ம உபா சனா கொள்கைகள் வேதவிருத்தமானவையாகும். புரா ணங்களில் பழைய சரித்திரங்களையும், அக்காலத்து மக் கள் நடந்த வாழ்க்கைமுறை, ஆட்சிமுறை முதலிய தர்மங் களையும், சகுனக் கடவுளின் உபாசனை தவம், யாகம், எக்கி யம், முதலியவைகளையும் சொல்லியிருக்கிறார்கள். கீழ் நாட்டு பண்டு அறிஞர்கள் எம்மனோதத்துவ ஆராய்ச்சியில் ஆத்மஞான தத்துவ உண்மைகளை கண்டனரோ, அது போலவே புத்தர், இயேசு, முகம்மதுநபி முதலியவர்களும் ஆத்மஞான உண்மைகளைக்கண்டு மக்கள் நன்மையின் பொருட்டு வெளியிட்டனர். நாஸ்திகர் இப்போது கட வுள் இல்லை யெனும் கொள்கையை பாமரமக்கள் ஏமாறு திருக்கும்பொருட்டு வெளியிடுவதாக கூறிக்கொள்கிறார் கள். அவர்களுள் முக்கியமானவர்களான **Hamilton, Comte, Nero, Mansel, Darwin, Gibbon, Hume, Reid, Buckle, Magaries, Buchner, Huxley, Tyndal, Spencer, Voltaire, Leakey, Stephen, Cottons, Bain, J. S. Mill, Bradlaugh** முதலியவர்கள் அபிப் பிராயங்கள் இப்போது பரவியிருப்பதுபோலவே, முற்கா லங்களில் ஆஸ்தீகக் கொள்கைகளை இந்திய புராதன இருஷிகளும், புத்தர், ஏசு, நபி முதலியவர்களும் கண்டு வெளியிட்டனர். நாஸ்திகக் கோள்கையை அவலம்பிப் போர் இப்பிரத்தியட்சமான பிரபஞ்சத்தில் ஏகதேசமாய்

சில பகுதிகளை ஆராய்ந்தறிந்து மனோதத்துவர்கள் கூறும் கடவுளை தங்கள் ஆராய்ச்சியில் காணமுடியாது, நாஸ்திக முடிவைக் கண்டனர். ஆஸ்திகர்கள் கண்ட உண்மைகளோ பிரபஞ்சத்தை ஆராய்வதில் கண்டுபிடிக்க இயலாதென்று உணர்ந்து, ஆத்மதத்வ அந்தர்முகத்தில் மனோலய வாயிலாய் கடவுளின் உண்மை தத்துவங்களைக் கண்டு பிடிக்கலானார்கள். புத்தர் அநேககாலம் சுற்றித்திரிந்து கடவுளைக் காணாது மனோமயப் பிரபஞ்சத்தில் ஆராய வேண்டி வெகுகாலம் வெளிப் பிரபஞ்ச நாட்டமின்றியிருந்து நிர்வாணநிலை யெய்தி மக்களுக்குத் தான் கண்ட உண்மைகளைப் போதிக்கலாயினர். புத்தமத எழுச்சி காலத்தில் முக்கால் உலகம் அம்மதத்தைப் பின்பற்றியிருந்தது. இயேசு 40 நாட்கள் மலைவாசத்தில் மக்களின் அஞ்ஞானங்களையும் பாவங்களையும் போக்க வழிகாண வேண்டி சித்த பரிசுத்தத்துடன் ஏகாக்ர மனோநிலையெய்தி கடவுள் வழிக்கு மக்களை திருப்ப அநேக உண்மைகளைத் தனது ஏகாக்ர சித்தத்தில் கண்டு அவைகளை மக்களின் நன்மையின் பொருட்டு உலகுக்கு அருளிச்செய்தனர். முகம்மது நபிகளும் மக்காவைவிட்டு மதினா சென்று அநேக நாள் கடவுளை மன்றாடி தவமிருந்து தனது அந்தர்முக பிரபஞ்சத்தில் தோன்றிய மேலான உண்மைகளை பாமர மக்களுக்குப் புகட்டியுள்ளார். இவர்களனைவரும் ஸ்தூல பிரபஞ்சத்தை ஆராய்ந்து காலத்தை வீணாக்கினார்களில்லை. ஸ்தூலத்தை ஆராய்வதில் கிரகங்களின் அளவையும் அவைகளின் கதியையும் கண்டுணர்ந்தார்களேயன்றி அவைகளால் அவர்கள் அடைந்த வேறு அநுபவம் யாது? புத்தர் இயேசு முதலானவர்கள் கண்டு கூறியது "கடவுள்" என்ற பொருளாம். அப்பொருளுக்கு பாஷா வேற்றுமையால் பல வாசகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. பாஷா வேற்றுமையால் பொருளில் வேறுபாடு எப்படிக் காணக்கூடும்? புராணங்களில் பெரும்பாலும் சகுனக் கடவுளையே உபாசனை கர்மங்களுக்காகக் கூறப்பட்டிருக்கிறது. புராணங்களில் கூறும் பிர்மா, விஷ்ணு, சிவன், சக்தி முதலியவைகள் சகுனக் கடவுளாகும். அவைகளுக்கும் சுருதிகளில் உடன்பாடு கூறப்பட்டிருக்கிறது. பிர்மா, விஷ்ணு,

சிவன் முதலிய நாமரூபங்களுக்கு ஆதாரம் சமஷ்டி அறிவேயாகும். அது நாமரூபாதீதமானது. அதுதான் பிர்மமென்பது. உபநிடதங்களில் கூறும் "பிரஞ்ஞானம் பிரமம்" "அயம் ஆத்மா பிரமம்" என்பனவும் அந்த சமஷ்டி அறிவு சக்தியேயாகும். அச்சமஷ்டி அறிவு எனும் ஆத்மா, கிருமி கீடாதிகளில், சொற்பமாகவும், படிப்படியாய் மனுஷர்களிடத்தில் பகுத்தறிவு வரையிலுள்ள அதிக பிரகாசமாகவும், பிர்மா, விஷ்ணு, சிவன் முதலியோரிடத்தில் சர்வசக்தி, சர்வஞ்ஞத்துவம், சர்வவியாபகம் முதலியவைகளுடன் பரம பிரகாசமாகவுமிருந்து இந்த சர்வ பிரபஞ்சத்தையும் நிர்வகித்து வருகிறது. சகுணத்தைக்கொண்டே நிர்க்குணத்தை யடையமுடியும். ஸ்தூலத்தைக்கொண்டே சூட்சுமத்தை யடையக்கூடும். இவ்வபிப்பிராயங்களினால் மத ஸ்தாபகர்களோ, இருஷிகளோ கண்டவைகளின் வாசக வேற்றுமையால் கடவுள் என்ற பொருளில் வேற்றுமை எப்படி ஏற்படும்? கடவுள் நாஸ்திகரையும் ஸ்பரிசித்துக்கொண்டிருக்கிறார். அவர்கள் செய்யும் நாஸ்திகவாத அறிவிற்கும் விளக்கத்தைக் கொடுத்துகொண்டிருக்கிறார். இப்பிரபஞ்சத்திற்கும் அதிலுற்ற மனுவாதி ஜீவர்களுக்கும் சமஷ்டி அறிவு சக்தியாயிருக்கும் கடவுளை, இப்பிரபஞ்சத்தொகுதியே ஸ்பரிசிக்க இயலாதெனின், மனிதனுடைய வியஷ்டி அறிவு எப்படி ஸ்பரிசிக்கக்கூடும்? வியஷ்டி அறிவின் ஸ்பரிசத்தைக்கொண்டு உணர்ச்சி பெறும் கர்மேந்திரிய ஞானேந்திரிய கூட்டங்கள் அவ்வியஷ்டி அறிவின் சம்பந்தமின்றி விஷயங்களை நுகரவாவது பார்க்கவாவது, கேட்கவாவது, ருசிக்கவாவது எப்படி முடியும்? மனிதனுடைய இந்திரியங்கள் வெளி விஷயங்களில் சம்பந்தப்படும்பொழுது மனிதனின் வியஷ்டி அறிவு அவ்விந்திரியங்களில் ஐக்யப்படாவிடில் அவ்விந்திரியங்களால் விஷய உண்மைகளையும், அநுபவங்களையும் அடையக்கூடுமோ? அவ்வியஷ்டி அறிவும் "அகம் பிர்மா அஸ்மி" என்னும் சமஷ்டி அறிவின் சக்தியால் (சமாதி) சம அவஸ்தை அடைந்துவிடின் வியஷ்டி அறிவும் விஷய சம்பந்தக்கூட்ட இந்திரியாதிகளும் விஷய உணர்வை எவ்வாறு அடையக்கூடும்? "சகலத்தையும் ஸ்பரிசித்துக்

கொண்டும், நுகர்ந்தும் கேட்டும் பார்த்துக்கொண்டும் இருக்கும் ஒன்றை எதனால் அறியமுடியும்" என்பதைக் கொண்டே "அப்பிரஹமம் மனவாக்குகளுக்கு விஷய மாகாததாம்" என்று சுருதி கூறுகிறது. மேல்கூறிய தத்துவத்தைக்கொண்டே பிரமம் கண்டமல்லாததால் அகண்டமென்றும், யாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பதால் "பரிபூரணமென்றும்", உபநிடதங்களில் கூறப்பட்டிருக் கிறது. குயவன் மட்பாண்டத்தைச் செய்ததுபோல் பிர பஞ்சம் சிருஷ்டிக்கப்படவில்லை. குயவன், பாண்டத்திற்கு நிமித்த காரணமேயன்றி உபாதான காரணமன்று. மண் குடத்திற்கு மண் உபாதான காரணமும், குயவன் நிமித்த காரணமுமாம். அதுபோல் பிரமம் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாகும். பாண்டமாகும் சக்தி எம்மண் ணுக்குமில்லை; அது களி மண்ணுக்குத்தானுண்டு. அதுபோல் கடவுள் சக்தி கலந்த பிரகிருதிக்கே (ஆகாயமும் பிராண சக்தியும்) பிரபஞ்சமாகும் தன்மையுண்டு. வெறும் பாழி லிருந்தாவது சூன்யத்திலிருந்தாவது பிரபஞ்சம் தோன் ருது. இதற்குதக்க நிரூபணமாக முதல் அத்தியாயத்தில் சுவாமி விவேகாநந்தரின் சொற்பொழிவிலிருந்து மேற் கோள் எடுத்தாளப்பெற்றிருக்கிறது. நம்மை தாய் தகப் பன் பெற்றமாதிரி இவ்வுலகை எப்படி பெறமுடியும்? நம் போன்றவர்களின் பிறப்பு, வியஷ்டியின் தோற்றமா கும். பிரபஞ்சம் சமஷ்டியின் தோற்றமாகும். இப்பின்ன வாதம் பிரபஞ்ச சிருஷ்டிக்குப் பொருந்தாது. இந்தப் பூமி சூரியனிடத்திலிருந்து பிரிந்து வெகுகோடி காலம் அக்னிப் பிழம்பாயிருந்து பிறகு இம்மண்ணுலகத் தன்மை யை யடைந்தது. முதன்முதலில் ஆண் பெண் வடிவ மாகிய இம்மனுவர்க்கம், பெற்ரோர்களின்றி எப்படி உற் பவமாயிற்று? மேல்நாட்டு அபிவிர்த்திக் கொள்கைப்படி ஆதியில் தாதுவர்க்கம் படிப்படியாக மனிதர்வரை தோன் றியதாகக் கூறினாலும், வாலில்லா குரங்குகளின் சேர்க்கை யால் மனிதனுண்டானனென்று கூறவும் ஞாயமுண்டோ? எவ்விதத்திலும் மனுக்கள் ஆதியில் உற்பவிக்க பெற்ரோர் கள் அவசியம் வேண்டுமே! அவர்களைப்பெறப் பெற்ரோர்க ளென்று முடிவில் அநவஸ்தை தோஷத்தில் முடியுமே

யன்றி சித்தாந்தம் காணமுடியாது. ஆகையால் இப்பூமியில் உற்பவிக்கும் தாதுவர்க்காதி மனுக்கள் வரையில் தோன்றுவதற்கு இப்பிரபஞ்சமாகிய பிரகிருதியிலேயே வர்க்கமூல ஜீவசத்துக்கள் அந்தர்கதமாயிருந்தது. அவைகளே வியக்த அவஸ்தையில் பல தோற்றங்களாக வெளிப்படுத்தப்பட்டன. “கடவுளும் பிரபஞ்சமும்” என்னும் நூலாசிரியர் பின்னும் கூறுவதாவது.—

“ மறுபிறப்பு இந்துக்களுடைய நூல்களில் சொல்லப்படுகிறது. மகம்மதியர் இதை நம்புவதில்லை. ஒரு மதத்திலுள்ள கோட்பாடுகள் மற்றொரு மதத்தில் இல்லை. அல்லது மறுக்கப்படுகின்றன. எந்த மதச்சுருதி சொல்வது உண்மை? மதங்களில் முக்கியமான சித்தாந்தம் சிருஷ்டி. இச்சிருஷ்டியைப் பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயங்களுக்கு கணக்கு வழக்கில்லை. கிருஸ்தவன், குயவன் பாண்டத்தை சிருஷ்டித்தது போல், கடவுள் உலகை சிருஷ்டித்ததாகக் கூறுகிறான். இந்து பிரமன் தலையிலிருந்தும் முகத்திலிருந்தும் வயிற்றிலிருந்தும் காலிலிருந்தும் மனிதனைச் சிருஷ்டித்ததாகச் சொல்லுகிறான். மகம்மதியன் கடவுள் உலகை சிருஷ்டித்தார் என்று பொதுவாக சொல்லுகிறான். புத்தன் சிருஷ்டியைப்பற்றி விசாரிப்பதே பயனில்லை என்று சொல்லுகிறான். யாருக்கும் எந்தவிதமாக உலகம் வந்திருக்குமென்பது உண்மையாக தெரியாதபடியால் மனம் போனவாறு உத்தேசித்து வந்தார்கள். இதனால்தான் ஒரு சுருதி மற்றொரு சுருதிக்கு மாறுபட்டு எழுதப்பட்டிருக்கிறது. அவரவர்கள் மனம் போனபடியே உத்தேசித்து எழுதிவைத்தார்கள். மனதினால் எண்ணித்தானே வந்தது இவ்வுலகம், என்றார் ஒருவர். வெளிச்சம் உண்டாகுக என்றபோது உலகம் உண்டாயது என்றார் மற்றொருவர். இவ்வித சிருஷ்டி கதைகளைக் கட்டியமைத்து வேதங்களெனவும் புராணங்களெனவும் பெயரிட்டு பாமர உலகம் அவைகளை நம்பி நடக்கும்படி சூழ்ச்சிகள் செய்துள்ளார்கள். கடவுளை தொழு இல்லாவிடில் அவர் தண்டிப்பார் என்றும் நரகமென்று ஒன்றுளது அதில் கொண்டுபோய் போடுவார்கள் என்றும் கட்டுக் கதைகள் மூலமாய் மனித குலத்தைப் பயப்படச்செய்து வருகின்றனர் ”

இந்துக்களில் கர்ம உபாசனையைப் பின்பற்றுபவர்களுக்கு மறுபிறப்பு சொல்லப்படுகிறது. அத்வைதத்திலோ

மறுபிறப்பு என்பதேயில்லை. இப்பிறவியும் சொற்பனம் போல் கற்பிதம் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இந்துக்களில் கர்ம உபாசனு கிரமத்தை பின்பற்றுவோர் இவ்வுலக அநுபவங்களின் துவைத பாவனையின் வாசனு பலத்தால் அச்சமஸ்காரங்கள் சித்தத்தில் தங்கி அச்சமஸ்கார பீஜங்களே முதிர்ந்து அவைகளை அநுபவித்துதீர ஸ்தூல சரீரமடையப்படுகிறது. சூக்கும சமஸ்காரமின்றிய அத்துவைதிகளுக்கு கர்மானுபவ வாசனு சரீரமின்ரும். மற்ருே, உலக உபகாரநிமித்தம் தோற்றல்மாத்திரமாம். எனவே பொதுவாக இந்துக்களில் மறுபிறப்பென்பது சித்தத்தில் தங்கிய வாசனைக்கேயாகும். ஸ்தூல சரீரத்திற்கு மறுபிறப்பின்ரும். இந்துக்கள் கூறும் மறுபிறப்பை ஸ்தூல சரீரத்திற்கென்ற விபரீத பாவனையால் கிறிஸ்து, மகம்மதியர்கள் ஆக்ஷேபிக்கிருர்கள். மறுபிறப்பைப்பற்றி சுருதிகள் கூறுவதில்லை. ஆத்மஞான தத்துவம் எவையோ? அவைகளைமட்டும் போதிப்பதுதான் சுருதி எனப்படும். புநர்ஜனனத்தைக் கூறுவது ஸ்மிருதி புராணங்களாம். சுருதிக்கு எவ்வளவு பொருந்துமோ அதுவரையில்தான் ஸ்மிருதி புராணக் கோட்பாடுகளை சுருதி ஏற்றுக்கொள்ளும். எதிர்மறை விஷயங்கள் சுருதிக்கு உடன்பாடன்று. மதங்களில் முக்கியமான சித்தாந்தம் சிருஷ்டி என்பது பிசகு. இந்து வேதங்களில் காணப்படும் ஆத்மஞான தத்துவங்களில் சிருஷ்டியை "அநிர்வசனீயம்" என்று ஒதுக்கிவிட்டிருக்கிருர்கள். பகிர்முக விசாரணையால் அவர்களுக்கு யாதொரு பயனுமின்று. யஜுர்வேதத்தின் பிரகதாருண்ய சுவேதாசுவதர உபநிடதத்தில், சுவேதா சுவேதர முனிவர் மற்ற மறையோர்களுக்குக் கூறியதாவது, "சுருதி வசனங்களில் பிரமத்திற்கு ஜகத்காரணத்தன்மை கூறியது நிர்விகார அத்விதீய பிரமத்திற்கன்ரும், பிர்ம சப்தத்தின் கௌணார்த்தமாகிய ஆகாசாதிகட்கேயாம்" யென்று சொல்லப்பட்டிருக்கிறது. பிரமன் முகத்திலிருந்தும் புஜத்திலிருந்தும் மனிதனை சிருஷ்டித்ததாகக் கூறுவது, பிராமணன் தன் அறிவைக்கொண்டு சுயதர்மத்தை அவலம்பிக்க வேண்டுமென்பதை சூசிப்பிக்க பிராமணன் தலையிலிருந்து தோன்றிஞனென்றும், புஜபலமஞே

பலத்தினால் க்ஷத்திரியன் தன் தர்மத்தைச் செய்யவே
மார்பிலிருந்து தோன்றினானென்றும், கைகளினால் வைசி
யன் தன் தர்மத்தைச் செய்கிறான் என்று வைசியன் கை
களிலிருந்து தோன்றினான் என்றும், சூத்திரன், கால்களி
னால் தன் தர்மத்தைச் செய்கிறதால் கால்களிலிருந்து
தோன்றினான் என்றும் அவர்கள் தர்மத்தை கூறுவதற்கு
புராணிகர்கள் இக்கதையை கூறியிருக்கிறார்களேயொழிய
அவைகள் வேதத்தின் உடன்பாடன்று. வேதத்தின் சித்
தாந்த மின்னது? பூர்வபக்ஷ மின்னதென்று உணராதவர்
கள் மதத்தின் முக்கியமான சித்தாந்தம் சிருஷ்டிதான்
என்று கூறுவது அறியாமையாகும். புராணிகர்கள் பாமரர்
களுக்காக கூறிய சிலேடையான விஷயங்களை வேதத்தின்
தாற்பரியமென்று நினைத்து தாங்களும் மயங்கி தங்களை
பின்பற்றுவோரையும் மயங்கச்செய்வது பிழையேயாகும்.
எந்தவிதமாக உலகம் வந்தது என்பதைபற்றி அநேக
ஆயிர வருடங்களுக்குமுன்பே தத்துவ மூலமாக புராதன
இந்து அறிஞர்கள் கூறியிருக்கிறார்கள். சுவாமி விவேகா
நந்தர் சிருஷ்டியைப்பற்றிக் கூறுவதாவது.

“நாம் இக்காலத்தில் ஜடமென்று கூறுவது பூர்வீக
மனோதர்ம சாஸ்திரிகளினால் பூதங்கள் எனப்பட்டது.
அவர்கள் கூற்றுப்படி நித்தியமாயுள்ள ஒரு பூதம் உண்டு.
மற்ற ஒவ்வொரு பூதங்களும் இவ்வொன்றிலிருந்தே உண்டு
பண்ணப்படுகிறது. அது ஆகாசமெனப்படுகிறது. இந்த
பூதத்துடன்கூட பிராணன் என்னும் ஆதிசக்தி ஒன்று
உண்டு. பிராணனும் ஆகாசமும் ஒன்று சேர்ந்து அவற்றி
னசைவினால் மற்ற பூதங்களை யுண்டாக்குகின்றன. பின்னர்
கல்ப்பத்தின் முடிவில் ஒவ்வொன்றும் ஒடுங்கிவிடுகின்றது.
ஆகாசத்திற்கும் பிராணனுக்கும் திரும்பி சென்றுவிடுகின்
றது. மிகப் பழமையான இருக்கு வேதத்திலே சிருஷ்டி
யைப்பற்றி ஒரு வாக்கியம் உளது. “எதுவுமில்லாமலும்
எல்லாமிருந்தும் இருந்தகாலத்தில் அந்தகாரத்தின்மீது
சுற்றி சுழன்றுகொண்டிருந்த காலத்தில் எது இருந்தது?
(விடையளிக்கப்படுகிறது) இந்தப் பிராணன் அப்பொழுது
இருந்தது. ஆனால் அதிலே சலனமில்லை. பின்னர் கற்பம்

ஆரம்பிக்கிறபொழுது சலனமற்ற அணுசலிக்க ஆரம்பிக்கிறது. அடிக்குப்பின்னடியாகப் பிராணனால் ஆகாசம் தாக்கப்படுகிறது. அணுக்கள் கெட்டியடைகின்றன. அவை கெட்டியடைய வெவ்வேறு பூதங்கள் உண்டாகின்றன. ஆகாசமானது பிராணனுடைய இடைவிடாத அடிகளினால் பாதிக்கப்பட்டு வாயுவை அல்லது சலனங்களை யுண்டு பண்ணுகிறது. இந்த வாயுவு சலிக்கின்றது. சலனங்கள் மென்மேலும் அதிவேகமாகி உராய்ப்பிலேமுடிந்து உஷ்ணமாகிய தேஜஸாகிற உஷ்ணத்திற்கு காரணமாகிறது. பிறகு இந்த உஷ்ணம் நீரிலே முடிகிறது. பின்னர் அந்நீர்கட்டியாகிறது. அது வந்தவழியே திரும்பி செல்கின்றது. கெட்டிப் பொருள் நீராக்கப்படும். பின்னர் அது ஒரு உஷ்ண குவியலாக மாறும். அது மறுபடியும் மெல்ல சலனத்தை யடைந்து வாயுவாகி அந்தச் சலனம் நின்றுவிடும். அந்த கல்பம் அழிக்கப்பட்டுவிடும். மறுபடியும் திரும்பி வந்து ஆகாசமாக மாறும். பிராணனனது ஆகாசத்தின் உதவியின்றி தனியே வேலைசெய்ய முடியாது. சலன வடிவத்திலே அல்லது நினைப்பு வடிவத்திலே நாம் அறிவதெல்லாம் பிராணனுடைய ஒரு மாறுதலேயாம். ஜடவடிவத்திலே அல்லது நினைப்பு வடிவத்திலே நாம் அறிவதெல்லாம் பிராணனுடைய ஒரு மாறுதலேயாம். ஜடவடிவத்திலே ரூபமாக அல்லது எதிர்ப்பாக நாமறிகிற ஒவ்வொன்றும் ஆகாசத்தின் ஒரு மாறுபாடேயாம். பிராணன் தனியே இருக்கமுடியாது. ஒரு மத்தியஸ்தமில்லாமல் வேலைசெய்ய முடியாது. அது தனிப் பிராணனா யிருக்கிறபொழுது அதற்கு ஆதாரமாக ஆகாசத்தையே உடைத்தாயிருக்கிறது. அது பிரகிருதி சக்திகளாக மாறுகிறபொழுது அதற்கு ஜடம் வேண்டும். நீ ஒருபொழுதும் ஜடமின்றிய சக்தியை அல்லது சக்தியின்றிய ஜடத்தை பார்ப்பதே இல்லை. நீங்கள் ஆங்கிலத்தில் பிராணனை ஜீவன், பிராணசக்தி என்று கூறக்கூடும். ஆனால் நீங்கள் அதை மனிதனுடைய ஜீவிதத்திற்கு அடக்கிக்கொள்ளுதல் கூடாது. ஆகையால் இது நடைபெறுகிறது. சிருஷ்டிக்கு ஆதியாவது அந்தமாவது இருத்தல் முடியாது. அது நித்திய நடையாம். இப்பழைய மனோதர்ம சாஸ்

திரிகளுடைய இன்னொரு நிலைமையை நாம் கூறுவோம். அதாவது ஸ்தூல வஸ்துக்களெல்லாம் சூக்ஷ்ம வஸ்துக்களின் பலன்களேயாம். ஸ்தூலமாயுள்ள ஒவ்வொன்றும் சூக்ஷ்மத்தாலாக்கப்பட்டது. அவர்கள் அவற்றை தன் மாத்திரைகள் என்கிறார்கள்"

பிரபஞ்சத்தின் ஒருபாகம் எப்படி கட்டப்பட்டிருக்கிறதோ, அதே அமைப்பில்தான் பிரபஞ்சம் முழுதும் கட்டப்பட்டிருக்கிறது. ஆகையால் 'பிரபஞ்சத்தின் ஒரு பாகமாகிய மனிதனுக்கு மனம் உள்ளதுபோலவே, ஜகத்துக்கு ஓர்மனம் உண்டு. வியஷ்டியில் எப்படியோ அப்படியே சமஷ்டியிலும் சமஷ்டி ஸ்தூலமாகிய இப்பிரபஞ்சமிருக்கிறது. அதன்பின்னே சமஷ்டி சூக்ஷ்ம சரீரமிருக்கிறது. அதன்பின்னே சமஷ்டி மனமிருக்கிறது, அதன் பின்னே சமஷ்டி அகங்காரமிருக்கிறது. அதன்பின்னே சமஷ்டி அறிவு இருக்கிறது. இந்தக் கிரமப்படி வியஷ்டியிலும் இருக்கிறது. சமஷ்டியிலுள்ள படிப்படியான அவஸ்தை நியதிகளுக்கு விராட்டு, இரண்யகர்ப்பன், ஈஸ்வரன், பிரமம் என்று வேதங்களில் கூறப்பட்டிருக்கிறது. சமஷ்டி அறிவே கடவுள் எனப்படுவது. மேல் கூறிவந்த ஞாயங்களால் கடவுளைப்பற்றி சுருதிகளில் கூறுவன பொருத்தமற்றவை என்று கூறுவது எப்படி பொருந்துமென்பதை வாசக நேயர்கள் உணர்வார்களாக.

## மூன்றாவது அத்தியாயம்.

### கடவுள் என்றால் சத்து (உண்மை)

"கடவுளும் பிரபஞ்சமும்" என்ற நூலின் மூன்றும் அத்தியாயத்தில் "கடவுள் என்றால் என்ன?" என்ற தலையங்கத்தில், கடவுள் என்றால் என்ன என்று விஞ்ஞானமுகத்தே ஆராய்வோமென்றும், எந்தப் பொருளையும் குறிக்காது வெறுஞ் சொல்லாக முடியும் சொற்

களில் கடவுள் என்ற சொல்லும் ஒன்று என்பதாகுமென் றும்கூறி மேலும் விவரிப்பதாவது.—

"உலகில் மனிதன் தோன்றுவதற்கு முந்தி பல ஜீவன்கள், புல், பூண்டு, செடி, விருக்ஷம், ஊர்வன, பறப்பன, நடப்பன, முதலிய பிராணிகளும் பலகோடி காலம் வாழ்ந்து வந்தன. இப்பொழுது வாழும் மனிதர்களும், பிராணிகளும் முந்தி வாழ்ந்த தாவரம் பிராணி வகையராக்களின் சந்ததிகளாதலால் இவைகளில் கடவுள் என்ற பதமே கிடையாது. பலகோடி பிராணிகள் சத்தமிடுவதை கேட்டுவருகிறோம். அவற்றுள் ஒரு பிராணியாகிலும் கடவுள் என்ற பதத்தை உச்சரிப்பதை கேட்டிலோம். மனிதன் ஒருவன்தான் கடவுள் என்ற பதத்தை சொல்லுகிறான். குழந்தைகள்கூட அப்பதத்தைச் சொல்வ தில்லை. மதங்களில் அபிமானமுள்ளவர்கள் பழக்க வாசனை யால் கடவுள் என்ற பதம் எதைக் குறிக்கிறது என்று விசா ரிப்பதுமில்லை. அந்த வார்த்தையை விசாரிக்கப் புகுந்தவர் களை நாஸ்திகர் சண்டாளர் என்று ஏளனம் செய்கிறார்கள். இந்த சொல் எப்படி உற்பத்தியாயிருக்கும்? நமக்கு முந்தி வாழ்ந்துவந்த நமது மூதாதைகள் சுமார் 5, 6, லெட்சம் வரு ஷங்களுக்குமுன் காட்டு மிராண்டிகளாக இருந்துவந்தனர். இது கட்டுகதையல்ல விசாரணையில் ஏற்படும் முடிவு. வெளிப் பிரபஞ்சத்தின் ஒவ்வொரு நிகழ்வைக்கொண்டும் இவைக ளுக்கு ஆதாரம் ஒன்று இருக்கவேண்டுமென்று தீர்மானித் தான். காட்டுமிராண்டி யுகத்து மனிதச் செயலுக்கும் பிரா கிருத செயல்களுக்கும் வித்தியாசம் கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டம். தான் எவ்விதம் உயிருள்ளவனாக எண்ணினானோ அவ்விதமே தனக்கு அன்னியில் நிகழும் சம்பவங்களுக்கும், உயிர்கொடுத்தான் இடிஇடித்து தன் குடிசை நாசமானால் இடிராசனுக்கு தன்மேல் கோபமுண்டானதாக எண்ணி பயந்து வணங்கினான். நம்முன்னோர்கள் தங்கள் புறத்தில் நடக்கும் சம்பவங்களுக்கெல்லாம் ஒரு கர்த்தாவை கற்பித்துக் கொண்டு நல்ல சம்பவமாய் இருந்தால் அதற்கு, நல்ல தெய்வ மெனவும், அன்புடைய கடவுள் எனவும் கற்பனை செய்தார் கள். கெட்ட சம்பவங்களுக்கு கொடூர கோபமுள்ள தெய்வ மென்று கற்பனை செய்தார்கள். அன்புடைய தெய்வங்களை வாழ்த்திப் போற்றினார்கள். கடூர கடவுளுக்கு காவு பலி முத லியவை இடுகிறார்கள். இவ்விதங்களாக ஆதியில் கடவுள் என்ற சொல் கற்பிக்கப்பட்டு வந்திருக்கலாம். காரணமொன்று

இருக்க இதனை யறியாமல் கற்பித வார்த்தைகளை கற்பித்துக் கொண்டு அவைகளுக்கு கோவில், குளங்கள், பூசை நைவேத்தியம், பிரார்த்தனை, தொழுதல் முதலிய மூடப்பழக்கங்களை செய்துகொண்டு இன்று உலகம் மூட நம்பிக்கையில் ஆழ்ந்து கிடப்பதை நோக்கில் மனித உலகம் இன்னும் குழந்தைப் பருவத்தில்தான் ஆழ்ந்து கிடக்கின்றதென்பதற்கு சந்தேகம் வேண்டுமோ?

என்பது "கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலாசிரியர் அபிப்பிராயமாகும். கடவுள் என்ற சொல் எந்தப்பொருளையும் குறிக்காது, வெறும் சொல்லாக சொல்லும் சொற்களில் ஒன்று என்று வெறும் சொற்களால் சொல்லுவது தான் விஞ்ஞான முகத்தே ஆராய்வதாகுமோ? பண்டைய மனிதர்களும :புல், பூடாதி, ஊர்வன பறப்பன முதலியவைகளும், கடவுள் என்ற சப்தத்தை சொல்லாததினால் கடவுள் என்ற நித்தியவஸ்து இல்லையென்று எந்த விஞ்ஞான சாஸ்திரம் கூறுகிறது? இப்போது மேல்நாட்டு ஜடதத்துவ ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கும் **Oxygen, Hydrogen, Ether, Electrons, Radium, Atoms, Molecules, Mosses Matter,** முதலிய வாயுக்கள், மின்தாதுக்கள், பரமாணுக்கள், அணுத்திரள்கள், தீமொத்தைகள், கிட்டங்கள் ஆகியனவும், ஆறு சந்திரர்களால் சூழப்பட்ட **Uranus** என்ற கிரகத்தையும், ஏழு சந்திரர்களால் சூழப்பட்ட **Saturn** சனிக்கிரகத்தையும் **Jupiter** வியாழக்கிரகத்தையும் இன்னும் அண்டத்திலுள்ள அனேக கோளங்களையும் கண்டுபிடிப்பதற்குமுன் அவைகள் இருந்திருக்கவில்லையென்று எந்த அறிஞரும் கூறமாட்டார்கள். அவைகளை கண்டு !பிடிப்பதற்குமுன் அவைகள் மனுஷவர்க்கத்தில் உணரப்படாமைக்காக அவைகள் இல்லை என்று கூறிவிடுவதா? புல், பூடாதி, ஊர்வன ஜந்துக்கள் வாயுவாதி ககோளங்களின் பெயர்களை சொல்லாததினால் அவைகள் இல்லை என்று கூறிவிடுவதோ? எல்லா ஜீவவர்க்கங்களிலும் மனிதன்தான் (**Rationalist**) பகுத்தறிவுடையோனு யிருக்கிறுன். பகுத்தறிவுடையோன் தன் அறிவாற்றலால் கண்டுணரும் பொருள்களை மிருகாதிவர்க்கங்கள் உணராததினால் அவைகள் மெய்

யென்று ஏற்பட்டிருக்க எந்த நியாயத்தைக்கொண்டு கீழ்திசை சாஸ்திரிகள் கண்டுணர்ந்த ஆத்மதத்துவ உண்மைகளை நிராகரிக்கமுடியும்? மனிதவர்க்கத்தில் ஆயிரக்கணக்கான பாஷைகள் பேசப்பட்டு வருகின்றன. மிருகாதி பட்சி இனங்களும் விதம்விதமான சப்தங்களை இடுகின்றன. ஓர் இனத்தின் சப்த தாத்பரியம் இதர இனங்களுக்கு விளங்குவதில்லை. மனிதவர்க்கத்திலும் கடவுள் என்ற பொருளுக்கு பாஷாவாரியாய் பலவிதமான பதங்களைக் கூறுகிறார்கள். மனிதவர்க்கம் கூறும் சகல சப்தங்களின் பொருள்களை உணர இயலாத மானிடருக்கு மிருகாதி, பறப்பன முதலியவைகளிடும் சப்தங்களின் பொருளை எப்படி உணரமுடியும்? ஆகவே கடவுள் என்ற சப்தத்தை ஊர்வன, பறப்பன முதலிய இனங்கள் சப்திக்கவில்லையென்று எவ்வாறு இவ்விஞ்ஞான ஆராய்ச்சியாளர் கண்டனரோ தெரியவில்லை. ஆதியில் அக்கினி பிண்டமாக இருந்த இவ்வுலகம் குளிர்ந்து கட்டிமயமாக எட்டு கோடி வருஷங்களான தன்னியில், இது சூரியனிடமிருந்து பிரிந்தபோது 2,00,000 சென்டி கிரேட் உஷ்ணத்திலிருந்து 200 சென்டிகிரேட் குளிர்ச்சிக்குவர 3500,00,000 முப்பத்தைந்து கோடி வருஷங்களாயிற்றென்று **Leprotic** லெப்ரோடிக் சாஸ்திரியார் கூறுகிறார். இதேமாதிரி அப்பிண்டம் குளிர்ச்சியாகி ஜலரூபமடைந்து கட்டியாகி பாசி படர்ந்து புல்பூடாதி மனுவர்க்கம் வரையில் ஜீவர்கள் தோன்றி இப்போது பூவுலகமாக இயங்கிக்கொண்டிருக்கிறது. மேல்நாட்டு தத்துவ சாஸ்திரியாகி **W.M.Blendit** எம். பிளன்டிட் என்பவர் இந்த பூமி சூர்யகிரகப் பிண்டத்திலிருந்து பிரிந்து 6,00,00,00,000 கோடி வருஷங்களாகி யிருக்கவேண்டுமென்றும், **Sir William Thomson,** சர் வில்லியம் தாம்ஸன் என்ற (**Philosocal Mazagine**) சாஸ்திரி நமது பூமியின்மேல் கிட்டந்தோன்றி 9,80,00,000 வருஷங்களாகி யிருக்கவேண்டுமென்றும் கணித்திருக்கிறார்கள். இவ்வாறெல்லாமிருக்க ஐந்தாறு லட்ச வருஷங்களுக்கு முன்புதான் மனிதவர்க்கம் தோன்றியதென்றும், அவ்வர்க்கத்தினராகிய நமது மூதாதையர் காட்டுமிராண்டிகளாக இருந்துவந்தார்களென்

றும் கூறுவது எப்படி விசாரணையில் ஏற்பட்ட முடிபாகும்? இந்துமத புராண இதிகாசங்களில் கூறும் உண்மையளவு கூட, இவர்கள் விசாரணையில் ஏற்பட்ட முடிவு உண்மை யற்றதாயிருக்கிறது. தற்கால மேல்நாட்டு ஆராய்ச்சி யாளர் கூற்றின்படியே மனிதவர்க்கம் தோன்றி எத்துணை யோ கோடி வருஷங்களாகிவிட்டன என்றேற்படுகிறது. இந்துக்கள் கூறும் சதுர்யுக கணக்கின்படியும் எத்தனையோ கோடி வருஷங்களாக மனிதவர்க்கம் இந்த பூமியிலிருந்து வருவதாக ஏற்படுகிறது. அக்காலத்தியவர்கள் காட்டு மிராண்டிகளாக இருந்துவந்தார்களென்பதும் ஆராய்ச்சி யின்மையேயாகும். இந்த காலத்திலும் காட்டுமிராண்டிக ளிருந்துகொண்டுதா னிருக்கிறார்கள். இந்தியா சகல கலை களிலும் சிறப்புற்றோங்கி இருந்த 3000 வருடங்களுக்கு முன்புகூட ஜெர்மனியர் உடம்பில் சாயம் பூசிக்கொண்டும் இலைகளை தரித்துக்கொண்டு மிருந்திருக்கிறார்கள். ஏதோ சில இடங்களில் நாகரிக மற்ற மனுக்களிருப்பதற்காக இப்பூமியிலுள்ளோர் யாவரும் காட்டுமிராண்டிகள் என்று கூறிவிடுவதாகுமா? ஆதியில் இப்பூமியில் தோன்றிய மனு வர்க்கங்களில் சில இடங்களில் சர்வஞ்ஞ தன்மையுடன் கூடியவர்களும், சில இடங்களில் அஞ்ஞான தன்மை யுடை யவர்களும் தோன்றினார்கள். சர்வஞ்ஞ தன்மையுடைய மனுவர்க்கங்களால் பாமரமக்கள் சீர்திருத்தமடைந்து வந் தனர். அவ்வாறு சர்வஞ்ஞதத்துவம் பொருந்தியவர்களைத் தான் கீழ்நாட்டார் இருஷிகள் என்று கூறுகிறார்கள். பெரும்பாலும் கீழ்நாட்டு மனுக்கள் அனைவரும் அவர்கள் சந்ததியேயாகும். காட்டுமிராண்டி யுகத்து மனிதன் செய லுக்கும் தற்கால மனிதன் செயலுக்கும் வித்தியாசம் கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டமென்றால், நாரிக செயல் தான் என்ன? மேல்நாட்டினர்போல் பிரகிருதியை ஆராய் வதுதான் நாகரீகமாகுமோ? பழைய காட்டுமிராண்டிகள் எனப்படுவோர் ஆத்ம தத்துவ அநுபவங்களை வெளியிட் டிராவிடில் பிரகிருதியை ஆராய இக்காலத்தில் ஆராய்ச்சி யாளருக்கு அறிவேது? ஆத்மா, அல்லது கடவுள் ஒன்று உண்டென்று கூறிய கொள்கையிருந்ததாலன்றோ, இப் போதுள்ளவர்களும் பழைய வழியைவிட்டு நவீன பிரகிரு

தியில் கடவுளை ஆராயப்புகுந்தனர். ஜடக்கருவிகளைக் கொண்டு பிரபஞ்சத்தை ஆராயின் ஜடங்களின் ரகசியத்தை யறியலாமேயன்றி சூட்சமத்திலும் சூட்சம சக்தியை உணரமுடியாதென்று கீழ்நாட்டறிஞர்கள் கூறியவை பிரமாணமாயிற்றல்லவா? ஜடதத்துவத்தில் நிபுணர்களாயும், உலகாநுபவம் பெற்றவர்களாயுமிருக்கும் பகுத்தறிவாளர்கள், மனோதத்துவ சாஸ்திரிகளின் அநுபவ முதல்படிக்கே செல்ல ஆற்றலற்றவர்களா யிருக்கிறார்கள். அவர்களை விட கேவலமுற்ற பாமரமக்கள் தங்கள் தங்களிஷ்டப்படி அனேக தெய்வங்களை அன்பாகவும், பயம் காரணமாகவும் சிருஷ்டித்துக் கொள்ளுவதில் அதிசயம் யாதுளது? மனுக்களுக்கு பலவிதமான கொள்கைகளும், அநுஷ்டானங்களும் ஏற்பட்டு அவர்களின் வாழ்க்கை அஞ்ஞானத்தில் வீழாதிருக்கும்பொருட்டு ஆத்மஞான தத்துவாநுபவிகள் ஆத்ம ஞானங்களை போதித்து கடைத்தேற்றி வருகிறார்கள். சிருஷ்டி கர்த்தாவே யில்லையென்று கூறும் பகுத்தறிவாளர்களைவிட அக்காட்டுமிராண்டி தன்மையுடையவர்கள் எவ்வளவோ சிறந்தவர்களன்றோ!

அவர்கள் தங்கள் அறிவுக்குத் தக்கபடி ஏதோ ஒன்றை தெய்வத்தின் பிரதிமை என்றும், அதற்குச் செய்யும் சகல சடங்குகளையும் தெய்வத்திற்குச் செய்வதென்றும் நம்பிக்கைகொண்டு திருப்தியடைகின்றனர். அவ்வளவு திருப்திகூட பகுத்தறிவாளர்க்கு இல்லையே! அவர்கள், நாம் மனிதரூபமாக எப்படி வந்தோம்; நமக்கு ஜீவன் உண்டா இல்லையா? என்ற அநுபவப் பிரமாணங்களையும் விட்டு சிருஷ்டிகர்த்தா இல்லை; எல்லாம் இயற்கையென்று கூறுகிறார்கள். இவர்கள் கண்களிருந்தும் குருட்டுத்தன்மையினராகவே யிருக்கின்றனர். ஆகவே, காட்டுமிராண்டிகளைவிட இவர்கள் எந்த நிலையில் உயர்ந்தவர்கள் என்பதை வாசகர்களே ஊகித்து உணரவேண்டும்.

எப்படி உலகம் உண்மையோ, மனிதனுடைய ஜீவிதமும் உண்மையோ, அவற்றைப்போல் கடவுளின் இருப்பும் உண்மையேயாகும். ஆதலால் வேதங்களில் 'கடவுள் சத்தெனப்படும்' எனக் கூறப்பட்டிருக்கிறது. ஜடமாகிய

அசேதனங்களில் எதுவும் பிரதிபலிப்பதின்றும். கடவுள் உண்மையென்பது நிரூபிக்கப்பட்டது. பகுத்தறிவாளர்க்கு இப்போது தோன்றியிருக்கும் பகுத்தறிவு, காட்டுமிராண்டிகளாகிய தங்கள் முன்னோரின் அறிவில்லாமல் எப்படி வரக்கூடும்? அக்காட்டுமிராண்டிகளிடம் இப் 'பகுத்தறிவு' வெளிப்படாதிருந்திருக்கவேண்டும். அல்லது இப்பிரகிருதியிலாவது இருந்திருக்கவேண்டும். இல்லாத புதிய ஞானம் இப்பகுத்தறிவாளர்க்கு ஏற்பட்டு விட்டதென்று சொல்வது விஞ்ஞான நியதியன்று. ஆதலால் குழந்தைகளை மூடர்கள் என்று சொல்லுவது நியாயமானல் முன்னோர்களை காட்டுமிராண்டிகள் என்று சொல்வதும் நியாயமாகும்.



## நான்காம் அத்தியாயம்.

---

### பிரபஞ்சமுழுதும் கடவுள் சித்து. (பிரகாசம்)

"கடவுளும் பிரபஞ்சமும்" எனும் நூலின் நான்காவது அத்தியாயத்தில் 'கடவுள் செய்யும் வேலைதான் என்ன?' என்ற தலைப்பின்கீழ் காணப்படுவதாவது.—

> "புராணங்களில் கடவுள் சிவனுகவோ, விஷ்ணுவாகவோ அவதரித்து சிற்சில கிர்த்தியங்களைச் செய்ததாக சொல்லப்படுகிறது. இதை அறிஞர் உலகம் நம்புவதற்கு இடமில்லை"

புராணங்களில் கூறும் சிவன், விஷ்ணு வென்ற நாமரூபங்கள் கடவுளன்று. நாமரூபாதீதமான சமஷ்டி ஆத்மாவே கடவுளாகும். சரீர அவயவ அமைப்பில் கிருமிகீடங்களைவிட மனிதன் எத்தனை மடங்கு சிறந்தவனே, அதுபோல் சிவன், விஷ்ணுக்களின் சரீர அமைப்பும் மற்றவைகளைவிட சிறந்ததாகும். அறிவிலும், ஆற்றலிலும் சிறந்ததாகும். எல்லாவற்றிலும் வியாபித்துள்ள ஆத்மசக்தி எதுவோ அதுதான் 'கடவுள்' என்பது. பாமர மக்கள் ஒன்றையும் நம்பாது மரம்போல் அசேதனமாயில்லா

மல் படிப்படியாய் உயர்நிலையடைய கதாரூபமாய் சில அவ தார மகாத்மியங்களைக் கூறுவது புராணங்களாகும். சுரு திக்கு எத்துணையளவு உடன்பாடோ, அவ்வளவு புராணங் கள் கூறும் விஷயங்களும், சித்தாந்தங்களாகும். ஏனைய வைகள் கற்பிதங்களாகும். இந்த உண்மைகள் இந்துமத வேதாந்த பாகத்தில் வியக்தமாய்க் கூறப்பட்டிருக்கிறது.

மேலும் அந்நூலாசிரியர் கூறுவதாவது.—

"சில மதங்களில் கடவுளுடைய அருள்பெற்று ,அபூர்வச் செய்கைகள் செய்ததாக சொல்லுவதும் உண்டு. கிறிஸ்து, மகம்மதிய ஆகமங்களில் கிறிஸ்து, மகம்மது கடவுளருள் பெற்றவர்களென கூறப்படுகிறது ஆனல் மற்றவர்கள் செய் ததைவிட இவர்கள் செய்ததாகக் கூறப்படும் காரியங்கள் விசேஷமாகத் தோன்றவில்லை. அந்தக் காலத்தில் தோன் றிய இயேசு, மகம்மது, சிவன், விஷ்ணு துக்கம் நிறைந்த நமது காலத்தில் தோன்றலாகாதா!"

இப்போதும் அந்தந்த மதஸ்தாபர்களின் மதங்கள் அனுஷ்டானத்திலிருந்து வருவதினாலேயே, அம்மதஸ்தா பகர்களின் அபிப்பிராயமும் சிறந்ததென அந்தந்த மதஸ் தர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. மதஸ்தாப கர்களின் காலத்திலிருந்த அநாகரிக அனுஷ்டானங்கள் ஒழிய அனேக சீர்திருத்தங்களை மதாச்சாரியர்கள் செய் தனரேயொழிய அபூர்வச் செய்கைகள் செய்துவிடவில்லை. அபூர்வ செய்கைகளுக்காக அம்மதங்களை அவலம்பிப்பவர் கள் இக்காலம் அம்மதங்களை அனுஷ்டிக்கவில்லை. அவர் களின் சீர்திருத்தக் கொள்கைகளில் கடவுளையறியக்கூடிய வரையிலுள்ள தத்துவங்கள் அடங்கியிருப்பதால், அம் மதங்களை இன்னும் அனுஷ்டித்து வருகிறார்கள். மதக் கொள்கைக்கும் அபூர்வச் செயல்களுக்கும் சம்பந்தமே யில்லை. உலகிலே துக்கமில்லாத காலம் எப்போதுமிருந்த தில்லை. பண்டைக்காலங்களில் துக்கம் குறைந்து சுகம் நிறைந்துமிருந்தது. இக்காலம் சுகம் குறைந்து துக்கம் நிறைந்திருக்கிறது. ஏனெனில் அக்காலத்தியவர்கள் வாழ்க் கைக்குரிய போகசாதனங்களை அதிகமாய் விரும்பவில்லை. இக்காலத்தவர்களோ போகசாதனங்களைப் பெருமிதமாய் விரும்புகிறார்கள். அதன் காரணமாய் போட்டிகளும்,

சச்சரவுகளும் ஏற்பட்டு மனுவர்க்கத்தினரே கொள்ளைக் கூட்டத்தினராய்விட்டனர். தற்கால சீர்கேடுகளுக்குக் காரணம் மிதமிஞ்சிய போகசாதன வேட்கையேயாகுமென்பது உய்த்து நோக்குவோர்க்குத் தெள்ளிதில் புலனாகும் உண்மையே. போகசாதன விருப்பங்களை எவ்வளவுக்கெவ்வளவு சிக்கனப்படுத்தி திருப்தியடைவார்களோ, அவ்வளவுக்கு இவ்வுலகம் துக்கம் நிறைந்ததாகாது. அந்தக்காலத்தில் தோன்றிய ஏசு, மகம்மது, சிவன், விஷ்ணு இவர்கள் தோன்றவேண்டிய அவசரம் இந்தக் காலத்தில்லை. அந்தக் காலத்திலிருந்த அவசரம் வேறு. இந்தக் காலத்திலிருக்கும் அவசரம் வேறாகும். அந்தக் காலத்தியவர்கள் கிடைத்தமட்டும் திருப்தியடைந்து கடவுளையடையவேண்டிய வழியில் காலப் பெரும்பகுதியைச் செலவிட்டார்கள். இக்காலத்தவர்களில் பெரும் பகுதியினர் வாழ்க்கை சாதனங்களை அளவுக்குமிஞ்சி விரும்பி அவைகளையடைய பாமர மனுவர்க்கங்களை அடிமைக்குழியிலும் அறியாமையிலும், வறுமையிலும் தள்ளிவருகிறார்கள். இவர்களைத்தான் இப்போது "பகுத்தறிவாளர்கள்" (**Rationalist**) என்று கூறுவது. இம்மாதிரியான கொடுங்காரியங்களையகற்ற மேல்நாடுகளில் பெரியோர்களாகிய லெனின், டால்ஸ்டாய், கரிபால்டி மாக்ஸ்வினி, ஸன்யாட்ஸென் போன்றோர் தோன்றினார்கள். கீழ்நாடுகளில் ஒன்றாகிய நம் இந்தியாவிலோ, இராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகாநந்தர், இராஜாரரம் மோகன்ராய், கேசவசந்திர சேனர், தாதாபாய் நௌரோஜி, திலகபிரான், ரானடே, கோகலே ஆகியோர் தோன்றினர். தற்காலத்திலோ மேல்நாடுகளில் முஸோலினி, டிவேலிரா, கமால்பாஷா, வான்ஹிண்டன்பர்க் போன்றோர் தோன்றியுள்ளனர். கீழ்நாடுகளில் ஒன்றாய நம் இந்தியாவிலோ மகாத்மா காந்தி, ஜவஹர்லால்நேரு, படேல் சகோதரர்கள், சரோஜினி அம்மாள், அஸாத் ஆகியோர் தோன்றியுள்ளனர். இவர்கள் இக்காலத்திய அவசரத்திற்கு அவசியமானவர்கள். பண்டைக்கால அவசரத்திற்கவசியமாக கிருஷ்ணர், சங்கரர், புத்தர், இயேசு, மகம்மது முதலியவர்கள் தோன்றினார்கள் என்பதும் பொருந்தும்.

"கடவுளுக்கு என்னதான் வேலை? சிருஷ்டி என்பார்கள் பக்தர்கள். அவர்களில் சைவர்கள் சொல்லுவதாவது.-ஆன்மா அநாதியாக கர்மத்தில் தோய்ந்திருந்ததை சிவன் ஆன்மாவுக்கு தனு. கரன புவனபோகத்தை தனது கருணையால் அருளி ஆன்மா பாசத்திலிருந்து விடுபட பக்திமார்க்கத்தை உணர்த்தியதாகச் சொல்லுகிறார்கள். ஆன்மா என்பதே கற்பிதம். இதனை கற்பித்துக்கொண்டு அநாதியாகப் பாசத்தில் ஆழ்ந்து கிடந்ததை எடுத்து தூக்கிவிட தேகம். உலகம் முதலியவற்றை சிருஷ்டித்தாராம். கடவுளுடன் அநாதியாக இருந்த ஒன்றை மீட்டார் என்பதும் முரணே. எப்படி எனில் அநாதி என்றால் காலாதீதமாகும். காலத்திற்கு மீறியதை எப்படி மீட்பது? சர்வசக்தியுள்ள கடவுள் ஆன்மாவோடு அநாதியாக இருந்ததாகச் சொல்லுகிறார்கள். இரண்டும் அநாதி என்றால் ஒன்றை மற்றது சிருஷ்டிப்பது எப்படி? தனுகரண, புவனபோகங்களை கடவுள் ஜீவனுக்கு அளித்தாரென்றால் எவ்விதமளித்தார்? கை, கால், முகம், தலை முதலிய தேக உருப்புகள் எங்கிருந்து ஓடிவந்தன. அல்லது பிள்ளையாரைப் பிடிப்பதுபோல் பிடித்து வைத்தனரா? நம்முடைய அநுபவமெல்லாம் சீவனெனப்படுவோர் யாவரும் சிறு வித்திலிருந்து படிப்படியாக உருவங்களைப் பெறுங் காட்சியே. ஆதலால் கடவுள் முதலில் வித்தைப் படைத்தாரா? அல்லது சீவர் உருவங்களைப் படைத்தாரா?"

என்பது "கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலாசிரியரின் கூற்று. சிவனைப் பரதெய்வமாகக் கொண்டவர்கள் சைவர்களாகும். அவர்களின் கொள்கைப்படி ஆன்மா அநாதியாக பாசவயப்பட்டிருந்தது வியவகார ஸ்திதியின் சித்தாந்தமாகும். பதி என்பது சிவம். பசு என்பது ஜீவன். பாசம் என்பது அஞ்ஞானம். பிரபஞ்ச சிருஷ்டிக்கு இம்மூன்று பதார்த்தங்களும் அவசியமானவையே. அநாதியாக இம்மூன்றும் இல் (இல்லா) பொருள்களாயின், சிருஷ்டியில் இம்மூன்றும் எப்படித் தோன்றக் கூடும்? பாழிலிருந்தாவது, சூன்யத்திலிருந்தாவது ஒன்றும் தோன்றுவதில்லை. காரணமாகிய இம்மூப்பதார்த்தங்களே காரியமாக வியக்தமாயிற்று. இதை விளக்கமாய் முந்திய அத்தியாயங்களில் தெளிவுபடுத்தியிருக்கிறோம். பகுத்தறிவாளர்களுக்கு மனமோ, எண்ணங்

களோ, விஷயங்களை ஆராய்ந்துணரும் பகுத்தறிவோ உண்டென்றும், அவ்வுணர்வுகள் தங்கள் ஸ்தூல சரீரத்துடன் கலந்தே காரியவளவில் நிகழ்ச்சி யடைகின்றதென்றும், அநுபவத்தால் அறிந்துவரும்போது சைவர்கள் கூறும் 'ஆன்மா' என்பது கற்பிதம் என்று எப்படி கூறக்கூடும்? ஒருவன் தனக்கு நாக்கு இல்லை என்று சொன்னதுபோலிருக்கிறது இவர்கள் வாதம். சிவன் என்ற கடவுள் சகுனக்கடவுளாகும். சூட்சம சமஷ்டி சரீரத்தை யுடையவன் சிவனாகும். சிவசமஷ்டி சூட்சமத்தில், ஐக்கியமாயிருந்த ஜீவர்கள் வியக்தமாக்கப்படும்போது, தங்கள் கர்மாநுபவங்களை புசித்தநுபவிக்க தநு, கரண, புவனபோகங்களை ஜீவர்களுக்காக பதி அநுக்ரகிக்கிறார். சிருஷ்டியாகிய ஸ்தூல சூட்சம தோற்றத்திற்குப் பிறகுதான் முப்பதார்த்தங்களும் அநுபவங்களை யடைகின்றன. சிருஷ்டி சங்கோச ஒடுக்கமாகிய அவ்யக்தத்தில் இப்பிரபஞ்சம் வியக்தமாகும் வரையில் பதி, பசு, பாசம் என்னும் முப்பதார்த்தங்களும் ஏகமேயாகும். விகாசமடைந்தபோது சிருஷ்டியில் தோன்றிய ஜீவர்களும், தநு, கரண, புவனங்களும் ஒடுக்கமடையும் அவ்யக்தத்தில், பசுக்களாகிய ஜீவர்கள், பதியாகிய சிவசமஸ்டியில் ஏக ஐக்கிய நிலையடைவதே ஜீவர்களை மீட்பது என்பதின் பொருளாகும். இதில், இப்பகுத்தறிவாளர்கள் கண்ட முரண் யாதென்பது விளங்கவில்லை. சைவநூற்களில் சிருஷ்டியிலுற்ற ஜீவர்களை மீட்பதென்று கூறியிருக்கிறதேயொழிய அவ்யக்தத்திலுற்ற ஜீவ ஐக்யத்தை மீட்பதாகக் கூறவில்லை. அச்சைவர்களின் கொள்கைகளை நன்றாயுணராத குற்றத்திற்கு சைவர்கள் கொள்கை குற்றமுடையதாகுமா? வித்தில் விருட்சத்திற்குடையவும், முட்டையில் பட்சிக்குடையவுமான ஸ்தூல ரூபம் எப்படி சூக்ஷமமாயிருந்து பிரகிருதியின் பஞ்சபூத சத்துக்களின் சம்பந்தத்தால் எப்படி மரமாகவும், மூக்கு, கண், இறகு முதலிய அவயவ ரூபத்துடன் பட்சிகளாகவும், வெளிவந்தனவோ, அவற்றைப்போல் ஜீவர்களின் கைகால் முதலிய அவயவங்கள் ஜீவர்களின் சித்தங்களில் சமஸ்காரரூபமாயிருந்து பிரகிருதியின் பஞ்சபூத சையோக சம்பந்தத்தால் அவயவ ரூபத்

துடன் வெளியாயிற்று. பகுத்தறிவாளர்கள் தங்களுடைய வும், தங்கள் புத்திர பௌத்திரர்களுடையவுமான சிருஷ்டிகளை பிள்ளையார் பிடித்து வைப்பது போலவா செய்து கொண்டார்கள்? ஜலரூபமாயும், இரத்த ரூபமாயுமிருந்த நாதவிந்தில் எப்படி கை, கால், தலை முதலியவைகள் முளைத்தன? இவைகளை இவர்கள் உணர்ந்திருந்தால் இக் கேள்வி கேட்க இடமிராது. வித்திலிருந்து படிப்படியாக உருவங்களைப்பெறும் காட்சியே பகுத்தறிவாளர்க்கு உடம்பாடாயிருக்க, சிவன் என்ற வித்திலிருந்து பிரபஞ்சமென்ற உருவம் தோன்றும் காட்சி எப்படி எதிர்மறையாகும்? எனவே, சைவர்கள் கூறும் பதி, பசு, பாசக்கொள்கை பிரபஞ்சம் விரிந்த அவஸ்தையிலும்; பதி, பசு, பாச ஐக்கியமாகிய திரியேகத்துவம் பிரபஞ்சம் ஒடுங்கிய சங்கோசத்திலுமாம். இவ்விரண்டு மார்க்கங்களில் ஒன்று துவைத பட்சமெனவும், மற்றது சுத்தாத்வைத பட்சமெனவும் கூறப்பெறும். அவ்விரிவை ஆங்குணர்க:—

"வேதாந்திகள் என்ன சொல்லுகிறார் பார்ப்போம். சத்தம் அதாவது சொல்லிலிருந்து சோதி வந்ததாம். சோதியிலிருந்து ஆகாயம் வந்ததாம். அதிலிருந்து தீ, தண்ணீர், மண் முதலிய தத்துவங்கள் உண்டாயினவாம். வேதாந்திகள் உலகம் பிர்மத்திலிருந்து பரிணமித்தன என்பர் பரிணமித்தல் என்றால் ஒன்றிலிருந்து ஒன்று இயற்கையாகவே மாறுதல். ஆதலின் இயற்கையாகவே மாறும் பொருள்களுக்கு கடவுள் உதவி ஏன் வேண்டும்? இவ்விதமான சிருஷ்டி கதைகளுக்கு கணக்கு வழக்கு இல்லை. கடவுள் சிருஷ்டி ஒன்றைத்தானு செய்தார்? சிருஷ்டி செய்வித்து அதன் பிறகு மனிதர்களுக்கு உதவியாகவோ, அல்லது அவர்கள் அறிந்துகொள்ளும் பொருட்டு என்ன வேலை செய்துவருகின்றார். அவரை இல்லையென்ற நாஸ்திகர்களை ஆஸ்திகராக்க ஏன் அவர்கள் முன் கடவுள் பிரசன்னமாகலாகாது? இருந்தாலன்றோ பிரசன்னமாவார்? இத்தியாதி கேள்விகளுக்கு யாரும் விடை பகர்ந்தாரில்லை."

என்பதும் அந்நூலாசிரியர் வாக்கே. சிருஷ்டியைப்பற்றி வேதாந்திகள் கூறுவதாய் பகுத்தறிவாளர்கள் கூறும் விஷயங்கள் முற்றிலும் பிசகாகும். வேதத்தின் ஞான காண்

டத்தில் அத்துவைத சித்தாந்தத்தை அவலம்பிப்பவர்கள்
வேதாந்திகள் எனப்படுவர். அவர்களுக்கு சிருஷ்டியும்,
அதற்காதாரமான ஜீவ, ஈஸ்வர, ஜகத்துக்களும் பரமார்த்
திக சத்தையில் கற்பிதமாகும். அவர்கள் ஜகத்தைப்பற்றி
வியவகாரிக உண்மையில் வேதத்திலுள்ளதைக் கூறுகிறார்
கள். சாமவேத சாந்தோக்கிய உபநிடதத்தில், சுவேதகேது
வென்னும் புத்திரனுக்கு உத்தாலக ரென்னும் முனிவர்
சொல்லுவதாவது :—"சௌமியனே! சிருஷ்டிக்கு முன்
னே ஜகத்து ஓரே அத்விதீய சத்ரூப பிர்மமாயிருந்தது."
எப்படி சுவரிலுள்ள வர்ணங்கள், சுவற்றில் பலவிதமாகிய
சித்திரத்தை கற்பிக்கின்றனவோ, அவைபோலவே சத்தா
கிய பிரமத்தை ஆசிரயித்ததாகிய சக்தியானது, சத்தில்
விக்கிரிகையாகிய காரிய விசேடங்களைக் கற்பிக்கின்றது.
முதலில் அச்சக்தியால் கற்பிக்கப்பட்டது ஆகாசமாம்.
அல்லது சத்வஸ்துவில் ஏகதேசத்திலுள்ளது மாயை
எனும் சக்தி. அதில் ஏகதேசம் ஆகாசம். அதில் ஏக
தேசம் வாய்வு. இப்படியே அக்நி, ஜலம், மண் முதலிய
வைகள் உண்டாயின. இவற்றுள் பூதங்களின் நாமமும்
ரூபமும் பூதங்களுடையதாம். அவைகளின் சத்து அப்
ஸம் பிர்மத்தினுடையதாம் என்ற பஞ்சபூத விவேகப்
இந்துவேத உபநிடதங்களில் கூறப்பட்டிருக்கிறது. வேதா
ந்திகளால் உலகம் பிரமத்திலிருந்து பரிணமித்ததாக என
கும் கூறவேயில்லை. மதஸ்தர்களின் கொள்கை ரகசிய
கள் இன்னதென உணராது ஏதோ ஒன்றை வேதாந்தி
ளின் சித்தாந்தமெனக் கூறுவது அறியாமையேயாகும்
உலக சிருஷ்டிக்கு இந்துக்கள் ஆரம்பவாதம், பரிண
வாதம்,விவர்த்தவாதம் என்னும் மூவிதத்துறைகளில் ஆர
யப் புகுந்து, விவர்த்தம் தவிர மற்ற இரண்டையும் பூர்
பட்சம் செய்து விவர்த்தத்தை சித்தாந்தப்படுத்தி யிரு
கிறார்கள். பரிணமம் என்பது ஒன்றிலிருந்து ஒன்று இட
கையாகவே மாறுவது (Evolution) என்று பகுத்தறி
ளர்கள் கூறுகிறார்கள். ஒன்று தானாகவே வேறொன்று
மாறுவது இயற்கையானால் பால் தயிராக தானாகவே மா
விடவேண்டும். அப்படி மாறுவதற்கு வேறு சாதனங்க
தேவையில்லாதிருக்கவேண்டும். இயற்கை மாறுபா

டிற்கு எவ்வளவோ நிமித்த காரணங்கள் வேண்டியிருக்கின்றன. ஒவ்வொன்றும் தன் ரூபத்தைவிட்டு வேருெரு ரூபத்தையடைய வேறு பதார்த்தங்களின் சையோக சம்பந்தங்கள் அவைகளுக்கு அவசியமாகிறது. வித்து மரமாக வேண்டுமாயின் வித்துக்குப் பிரகிருதியின் பஞ்சபூத சையோக சம்பந்தம் தேவையாயிருக்கிறது. முட்டைக்குப் பட்சியின் ஸ்தூல, சூட்சம சரீர சையோக சம்பந்தம் தேவையாயிருக்கிறது. இப்படி வேறு பொருளின் சையோக சம்பந்தத்தை அபேட்சித்து மாறுந் தன்மையையடைவது எப்படி இயற்கைப் பரிணமமாகும்? இயற்கை என்பதின் இலக்கணமும், பரிணமம் என்பதின் இலக்கணமும் உணராதவர்கள், இந்துக்களில் வேதாந்திகளுக்கு விஞ்ஞானம் கற்பிக்க வந்தது வேடிக்கையா யிருக்கிறது. இயற்கையாயுள்ள விதைக்கும், முட்டைக்கும் பட்சியுடையவும், பஞ்ச பூதங்களினுடைவும் சையோக சம்பந்தம் ஏன் அவசியமாயிற்ருே அதுபோல் உலக உற்பத்திக்குக் கடவுளின் சையோக சம்பந்தம் அவசியமாகிறது. பிரபஞ்சத்தில் கடவுளிருப்பதனுல்தான் உலக நித்திய இயக்கங்கள் நடைபெற்று வருகின்றன. மனிதன் சாக்கிர, சுவப்பன, சுழூத்தி அவஸ்தைகளை யடைவதும், கர்மானுசாரமாக போகங்களை அநுபவிப்பதும் ஜீவர்களினுற்ற ஆத்மாவினிருப்பினுலாகிறது. அதுபோல் சமஸ்டி ஆத்மாவாகிய கடவுள், திருசியத்திலிருப்பதாலேயே பிரபஞ்சம் தன் தொழிலை நடத்திச் செல்லுகிறது. இப்பிரபஞ்சத்தில் சமஷ்டி ஆத்மாவாகிய கடவுள், ஜீவரூபமாக வியாபித்திருப்பதால் ஜீவர்களுக்கு வேண்டியவைகள் சகலமும்நடந்துவருகின்றன. நமது பூமிக்குப் போதுமான ஜலமில்லா விட்டால், பிரபஞ்சமாகிய நெருப்பு இப்பூவுலகையே நாசமாக்கிவிடும். பூதாக்கினியாகிய நெருப்பில்லா விட்டால் இப் பிரபஞ்சத்தை ஒரு பெரிய பனிக்கட்டியாக்கிவிடும். இவ்வுலகில் போதுமான குளிர்ச்சி யில்லா விட்டால் சூரியனிடமிருந்து நிமிஷந்தோறும் 120,00,000 மைல் தூரம் பீரிட்டுவரும் பிரகாசமானது படைப்புகளின் நேத்திரங்களைப் பாழாக்கிவிடும். காற்றின்றி ஜீவர்கள் சுவாசம்விடவும், சப்தத்தைக் கேட்கவும் கூடுமோ! பிரா

ணிகளுக்கு உதவாத காற்று, கந்தமூலாதிகளுக்கும், கந்தமூலாதிகளுக்கு உதவாத காற்று ஜீவர்களாகிய நமக்கும் உதவக்கூடியதாயிருக்கிறது. அக்நி சக்தி சமுத்திரத்திலிருக்கும் உவர் நீரிலிருந்து உப்பைக் கழித்து நீரை மாத்திரம் ஆவி ரூபமாய்க் கொண்டுபோய் நன்னீராக்கி, மேகங்களாக மாற்றி மழையாய்ப் பெய்யச் செய்கின்றது. மழை பெய்யும்பொழுது நீர்கட்டிகளாகப் பெய்யின் சகல கந்தமூலாதி பிராணிகளும் நிர்மூலமாகிவிடும். அவ்வாறெல்லாம் ஆகிவிடாதவாறே சிறு துளிகளாகப் பெய்கின்றன. இப்பிரபஞ்ச முழுதும் பற்பல உபயோகமுள்ள புல் பூடாதிகளால் போர்க்கப்பட்டிருக்கின்றன. இப்புற் பூடுகளில்லாவிடில் பலகோடி பிராணிகள் பிழைப்பதெப்படி? இன்னும் பருவகால நிகழ்ச்சிகளும், அவைகளால் ஜீவர்களடையும் நன்மைகளும் கர்த்தா இல்லாமல் இயற்கையாகவே நடைபெறுமா? கடவுளை ஜீவர்கள் அபரோக்ஷமாய் அறிந்துணரும் பொருட்டே பிரகிருதியில் அநேக நிகழ்ச்சிகள் உண்டாகி வருகின்றன. தங்களையும், பிரபஞ்சத்தையும் தினம் தினம் பார்த்து அநுபவித்துவரும் பகுத்தறிவாளர்கள் 'எங்களுக்கு நாங்களே பிரத்தியட்சமில்லை' யென்று சொல்வார்களாகில் அவர்களுக்குக் கடவுளின் பிரத்தியட்சம் எப்படி விளங்கும்! விழித்துக்கொண்டே தூங்குகிறவர்களுக்கு உலகக்காட்சி எப்படி பிரத்தியட்சமில்லையோ, அதுபோல் இவர்களுக்கு எல்லாம் சூன்யமேயாகும்.

"நமது முயற்சியால் எதுவும் திருவினையாகிறதேயொழிய தெய்வத்தால் அல்ல. நம்முடைய தேக அவயவங்களும் தாய் தகப்பன் மூலமாய் வந்த சக்தியால் சலனிக்கின்றன. வாய் பேசுவது, கண் பார்ப்பது, காது கேட்பது, மூக்கு முகர்வது, நாக்கு ருசிப்பது, தீனிப்பை ஜீரணிப்பது மற்றும் தேக உறுப்புகள் வேலைசெய்வது. தாய் தகப்பன் மூலமாகவந்த சக்தி (Energy) யால் அன்றி வேறோர் கடவுளால் அல்ல. இது தான் பிரத்தியட்ச காட்சி. இதை யாரும் மறுக்க முடியாது. தான் கோரிய காரியங்கள் ஒன்றுகூடி வந்தால் தெய்வத்தால் என்று எண்ணுகிறார்கள். ஆனால் கோரிய 99 காரியங்கள் கைகூடாமைக்கு யார் காரணமோ அதனை கவனிப்பதில்லை. கடவுள் செய்ததாகச் சொல்லும் செயல்களைவிட ஆச்சரிய

> மான விளையாட்டுகளைச் செய்கிறார்கள். ஒரு கண்ணிமைப் பொழுதில் மாங்காய் வித்திலிருந்து செடியும், பூவும், காயும், பழமும் உண்டாக்கிக் காட்டுகிறார்கள். இதைவிட ஒரு நாளில் கடவுள் இவ்வுலகை சிருஷ்டித்தார் என்று சொல்வதில் கடவுளுக்கு என்ன சிறப்பு? இந்த விசாரணையில் கடவுளுக்கு எந்த வேலையு மிருப்பதாகவும், அவர் செய்ததாகவும் விளங்கவில்லை."

என்கிறார்; அந்நூலாசிரியர். நமது முயற்சியால் எதுவும் திருவினையாகிறதே யொழிய தெய்வத்தால் அல்ல என்று சொல்லும் இந்நூலாசிரியர், மனிதன் கோரும் 99 காரியங்கள் கைகூடாமைக்கு என்ன காரணமென்று கேட்கிறார். இவருடைய கேள்வியே முன்னுக்குப்பின் முரணுடையதாகும். மனித முயற்சியால் எல்லாம் திருவினையாகும்போது ஏன் இவர்களுக்கு 99 காரியங்கள் கைகூடாமற் போயிற்று? மனித முயற்சியால் சகலத்தையும் உண்டுபண்ண முடியுமானால் பிரகிருதியின் உதவி யாதொன்றுமின்றி ஒரு கிருமியையாவது சிருஷ்டிக்க ஏன் முடிகிறதில்லை? வறுத்த விதையை ஏன் முளைப்பிக்கக் கூடாது? ஸ்திரிகளின் மலடுகளை ஏன் நிவர்த்திக்கக் கூடாது? ஜனித்த மனுக் கூட்டங்களின் பிராணன்கள் சரீரத்தினின்று மறைந்துவிடாதபடி ஏன் மனித முயற்சியால் இதுவரை செய்யப்படவில்லை? நோய்களினாலும், இதர காரணங்களினாலும் கோடானகோடி மக்களும், சிசுக்களும், மரிக்கின்றனரே! அவர்களை மரித்துப்போகாதபடி ஏன் தடுக்கக்கூடாது? சம்போகத்தில் கர்ப்பாசயத்தில் சம்பந்தப்படும் எல்லா விந்துக் கூட்டங்களும் கரு உருவாகி வருவதான மார்க்கத்தை ஏன் செய்யக்கூடாது? பூகம்பங்களினாலும், எரிமலைகளினாலும், அதி மழைகளினாலும், புயல் காற்றுகளினாலும், அக்நியினாலும், அனேக உத்பாத பிரமாதங்களினாலும், மலைச்சரிவுகளினாலும், இடிகளினாலும், அதிவிருஷ்டி, அனாவிருஷ்டி முதலிய யுகப்பிரளயங்களினாலும் ஜீவர்களுக்கு ஏற்படும் சிதைவுகளை இப்பகுத்தறிவாளர்கள் ஏன் தங்கள் மனித முயற்சியால் தடுத்துவிடக்கூடாது? பாலை வனங்களை கழனிகள் சூழ்ந்த நிலங்களாகவும், சூரியப் பிரகாசம் படாது பனிக்கட்டிகளாக

உரைந்து கிடக்கும் வட துருவதென் துருவப் பிரதேசங்களை மனித முயற்சியால் ஏன் சூரியகதியை மாற்றி வளம் பொருந்திய பூமிகளாக்கி விடலாகாது? கேவலம் (Mouut Everest) எவரஸ்ட் மலைச்சிகரத்தின் முனையைக் கண்டு பிடிக்க மேல்நாட்டு முயற்சியாளர்கள் அரும்பாடுபட்டும், மனிதமுயற்சி திருவினை யாகக்கூடவில்லை யென்றால், மனித முயற்சியால் எதுவும் திருவினையாகிற தென்பதில் யாதேனும் அர்த்தமுளதோ வென்பதை பகுத்தறிவாளர்களே கூறட்டும். நமது தேக அவயவங்கள், அவைகளின் அநுபவங்கள் சகலமும் தாய்தந்தையர் மூலமாய்வந்த சக்தி (Energy) யால் என்றால் அந்தச் சக்தி அத்தாய் தந்தையர்களுக்கு எங்கிருந்து வந்தது? இதை ஆராய்வோமாயின் படிப்படியாகச் சென்று முடிவில் இப்பூமியிலிருந்து வந்ததாக ஏற்படுமே ஒழிய வேறு வழியில்லை. இப்பூமிக்கு அந்த சக்தி எப்படிக் கிடைத்ததென்றால் சூரியனிடமிருந்து என்றேற்படும். சூரியனுக்கு அந்த சக்தி எப்படி ஏற்பட்டதென்றால், பஞ்சபூதங்களின் சையோக கவர்ச்சி இயக்கங்களால் என்றேற்படும். பஞ்சபூதங்களுக்கு அச் சையோக கவர்ச்சிகள் எங்கிருந்து உண்டானதென்றால் பிரகிருதியில் சூட்சமமாய் வியாபித்திருக்கும் பிராணசக்தியி லென்றேற்படும். அச்சமஷ்டி பிராணசக்தி சையோக சம்பந்தமாய் சகலத்துள்ளும் கலந்திருப்பதற்கு எந்தப் பொருள் அவகாசத்தையும், பிரகாசத்தையும் கொடுக்கிறதோ அதுதான் "கடவுள்" என்னும் சக்தி (Energy) யாகும். தாய் தகப்பன் மூலமாய் வந்த (Energy) சக்தி பகுத்தறிவாளர்க்கு உண்மையாயிருக்க இவைகளுக்கு ஆதாரமாயுள்ள கடவுள் என்னும் சக்தியை ஏன் (நாஸ்தி) இல்லை என்று இவர்கள் கூறவேண்டும்? வித்தையாடி இமைப்பொழுதில் மாவிதையிலிருந்து மாமரத்தை சிருஷ்டித்துக் காண்பிப்பதை பிரத்தியட்சப் பிரமாணமாகக் கருதும்போது, மனிதனுடைய (Mental Energy) மனோ சக்தி இமைப்பொழுதில் மாமரத்தைத்தோன்றச் செய்யும் போது, பிரபஞ்ச மனோசக்திகள் அனைத்தும் சேர்ந்த சமஸ்டி மனோசக்தியாகிய ஈஸ்வர சக்தியின் நினைவளவில் இப்பிரபஞ்சம் ஏன் சிருஷ்டியாயிருக்கக்கூடாது? சிரு

டியால் கடவுளின் சிறப்பை ஒப்புக்கொள்ளாவிட்டாலும், சிருஷ்டியை ஒப்புக்கொள்ளலாமே! வியஷ்டி மனோசக்திக்கு மாங்கணினை யுண்டுபண்ணும் தன்மை இப்பகுத்தறிவாளர்க்கு உடம்பாடாயிருக்க, இப்பிரபஞ்சத்தைக் கடவுள் சிருஷ்டித்தார் என்பதில் ஏன் மருட்சி ஏற்படவேண்டும்? இந்த விசாரணைகளைக்கொண்டு உலக நிகழ்ச்சிகளிலுள்ள சகல தொழில்களும் கடவுளின் (சித்து) பிரகாசத்தைக்கொண்டே என்றேற்படுகிறது.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

---

### இவ்வுலகு கடவுள் பிரகாசம்.

"கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலாசிரியர் தமது நூலின் ஐந்தாம் அத்தியாயத்தில் 'கடவுளுக்கு நமது உலகில் வேலையுண்டா?' என்னும் சங்கையை எழுப்பி விவரணத்திற் புகுவதாவது.—

"பிரகிருத சம்பவங்கள் யாவும் நடந்துவரும் முறையை பௌதீக பூகோள நூலில் நன்றாக விளக்கப்பட்டிருக்கின்றன. பூமி சூரியனைச்சுற்றி ஓடும் மார்க்கத்தில் சற்று அசைந்து ஓடுவதால் கோடைகாலம், மாரிகாலம், வேனிர்காலம், உதிர்காலம் உண்டாகின்றன. மழை காலங்களில் மின்சார சக்தியால் இடியும் மின்னலும், வெய்யில் காலத்தில் பூமியின்மேலுள்ள ஜலம் நீராவியாகி குளிர்காற்று பட்டவுடன் இரவில் பனியாக நிலத்தின்மேல் விழுகின்றன. குளிர்ச்சி அதிகரித்தால் காற்று மேல் எழுகின்றது. இவ்வித காற்று முதலிய பிரகிருத சம்பவங்கள் யாவும் கடவுளோ, தெய்வங்களோ, யாருடைய உதவியின்றி நிகழ்ந்து வருகின்றன. எதன் மத்தியிலும் கடவுளோ தெய்வமோ பிர்மமோ பிரவேசிப்பதை யாருமறியார். சகல சம்பவங்களும், நாம் பார்க்கக்கூடிய காரணகாரிய முறையில் நடைபெறுகின்றன. சில புராணங்களில் கடவுளால் நிகழ்ந்ததாகச் சொல்லப்படும் ஊமைப்பெண்ணை பேசவைத்ததும், எலும்பைப் பெண்ணாக்கியதும், குஷ்டரோகி ஸ்பரிசத்தால் குணமடைந்ததும், இறந்த மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்ததும், சூரியனை ஓடாமல் நிறுத்தியதும், இன்னும் இவைபோன்ற அற்புதங்கள் நிகழ்ந்ததும், இவைகள் கடவுளாலோ, அல்லது

அவர் அனுக்ரஹத்தாலோ நிகழ்ந்ததாகக் கூறியதை பலகோடி பாமரமக்கள் நம்பி அந்நம்பிக்கையின்மேல் தங்கள் வாழ்க்கையையும் நடத்துகின்றார்கள்.''

நான்காம் அத்தியாயத்தில் கூறிய சங்கையையே இந்த அத்தியாயத்திலும் கூறுகிறார் அந்நூலாசிரியர். சூரியனை பூமி சுற்றுவதும், பருவகாலங்களுண்டாவது முதலிய பௌதீக பூகோள ஆராய்ச்சிகள் யாவும் மேல்நாட்டார் கண்டுபிடிப்பதற்கு பல ஆயிரவருடங்களுக்கு முன்பே கீழ்நாட்டார் கண்டுபிடித்து விட்டார்கள். அவைகளைப் பற்றி ஆராயவேண்டின், பாகவத புராணத்தைப் பார்க்கவும். அண்டகோளங்களின் இயக்ககதியும், ஒன்றுக்கொன்று இழுப்பு, தள்ளல், கவர்ச்சிகளின் காரணங்களும், அவைகள் ஒன்றினுள் ஒன்று ஒடுங்குவதும், ஒன்றிலிருந்து ஒன்று வெளிப்படுவதும், எக்காரண ஆதார சக்தியால் என்பதை இப்பகுத்தறிவாளர்கள் உணரக்கூடாதவர்களாயிருக்கிறார்கள். இப்பிரபஞ்ச இயக்க காரியங்களுக்கு காரணமாகிய ஜீவசக்தி எதுவோ, அதைத்தான் இந்துக்கள் சகுணக்கடவுள் என்று கூறுகிறார்கள். சகல சம்பவங்களும், நாம் பார்க்கக்கூடிய காரணகாரிய முறையால் நடைபெறுவதாய் ஒப்புக்கொள்ளும் பகுத்தறிவாளர்கள் காரணமின்னதென்பதை ஏன் கூறவில்லை? காரணம் என்ற ஒன்றை உள்பொருளாக ஒப்புக்கொண்டிருக்கும்போது இயற்கையாய் சகலமும் நடைபெறுகிறதென்று ஏன் கூறவேண்டும்? இயற்கை நிகழ்ச்சிகளுக்குக் காரணம் எப்படித் தேவையாகும்? காரணமின்னதென்பதை ஜடபதார்த்த உபகரணங்களால் ஜடத்தில் காண இயலாததால், காரணமாகிய ஜீவசக்தியை பௌதீக, பூகோள விவேகிகள் இல்லையென்று கூறுகிறார்கள். கீழ்நாட்டறிஞர்களோ, பிரபஞ்ச காரணமாகிய ஜீவசக்தியை ஆத்மதத்துவ விவேகத்தால் உணர்ந்து வெளியிட்டிருக்கிறார்கள். இவ்வண்டகோடிகளுக் காதாரமாகிய பிரகிருதியின் ஜீவசக்தியே பிண்டகோளமாகிய மனிதவர்க்கத்திற்கு பிராணன், ஆத்மா, மனம், சித்தம், அகங்காரம், புத்தி என்று ஸ்தானத்திற்குத் தக்கபடி ஆதார பதார்த்தங்களாக விருக்கின்றன. இவைகளை நித்தியம் அநுபவித்துக்கொண்டிருக்கும் பகுத்

தறிவாளர்கள் இவைகளை இல்லையென்றால் அவர்களுக்கு பகுத்தறிவும் உண்டோ என்று ஐயுற ஏதுவாகிறது! இந்துமத சுருதிகளில் கடவுளோ, தெய்வமோ, பிர்மமோ பிரபஞ்சத்தில் பிரவேசித்ததாய் எங்கும் கூறவில்லை. "கடவுள் செய்ததாகச்சொல்லும் செயல்களைவிட ஆச்சர்யமான விளையாட்டுகளை மனிதன் செய்கிறான் என்றும், ஒரு கண்ணிமைப்பொழுதில் மாங்காய் வித்திலிருந்து மர முண்டு பண்ணி காட்டுகிறான் என்றும் அப்பகுத்தறிவாளரே ஒப்புக்கொள்கின்றனர். அவர்கள் அபிப்பிராயப்படி மனிதனே இவ்வித அதிசயமான காரியங்களைச் செய்யும்போது நியமமான காலவரையறையின்றி வித்தையாடி விதையை நட்டதும் அது மரமாக முளைக்கும்போது காலவரையறையின்றி உடனே பூ, பிஞ்சு, காய், கனிகள் தோன்றும் போது அந்நிகழ்வுகள் பகுத்தறிவாளர்க்கு உண்மையாயிருக்கும்போது, ஊமைப்பெண் பேசுவதும், எலும்பு, பெண்ணுருவாவதும், ரோகி குணமடைவதும், இறந்த மூன்றுநாள் உயிர்த்தெழுவதும், இன்னும் இவைபோன்ற ஆச்சர்யமான விளையாட்டுகளை அக்காலத்தியவர்கள் செய்ததாக புராணங்களில் கூறுவது இப்பகுத்தறிவாளர்க்கு ஏன் பொய்யாகத் தோன்றவேண்டும்? கேவலம் வயிற்றுப் பிழைப்புக்காக, வித்தையாடிகள், ஜாலவேடிக்கைக்காரர்கள் ஆகியோர் செய்யும் செயல்கள் ஆச்சர்யமான விளையாட்டுகளாக இருக்க, தெய்வ நம்பிக்கை யுடையவர்களும் தியாகிகளும், தெய்வசக்தி பரிபூரமிக்கப் பெற்றவர்களும், செய்த செயல்கள் ஏன் ஆச்சர்யமான விளையாட்டுகளாகாது ("கடவுளும் பிரபஞ்ச"மும் என்ற நூலின் ஆசிரியர், 3-வது, 4-வது அத்தியாயங்களில் கூறியவைகளையே மீண்டும் மீண்டும் கூறுகிறார். அவைகளுக்குத் தக்க சமாதானங்கள் அந்தந்த இடங்களிலேயே கூறியிருக்கின்றோம்.) கிறிஸ்தவர், மகம்மதியர், இந்து முதலியோர் கூறும் புராணங்கள், சரித்திரங்கள் ஆகியவை ஆராய்ச்சி நூல்களாகும். ஞானகாண்ட தத்துவத்தைச் சொல்லுவது வேதங்களாகும். வேதங்களில் ஞானங்களை போதிக்குமிடங்களில் கடவுளை நிற்குணமாகவும், புராணங்களில் கடவுளைப்பற்றி கூறுகையில் சகுனமாகவும் கூறப்படுகின்றன. இந்துப்

புராணங்களிலும், விவிலிய நூற்களிலும் நிகழ்ச்சியின் தாத்பரியத்தில் பேதங்களிருப்பினும் 'கடவுள் இல்லை' என்று அவைகள் ஒன்றிலும் கூறப்படவில்லை. ஆதலால், கடவுள் உண்டு என்பவர்களுள், மதாச்சாரியர்கள், அவதார புருடர்கள், இவர்களின் சரித்திரங்களில் கூறப்படும் வேற்றுமைகளை எடுத்துக் காட்டுவதினாலேயே கடவுள் இல்லை என்ற சித்தாந்தம் ஏற்பட்டுவிடுமா? நமது உலகில் நடக்கும் சகல இயக்கங்களும் வேதபுராணங்களில் கூறும் ஞானக்கலைகளும், அற்புதச் செயல்களும் விசாரணை யற்றவர்களுக்கு கற்பனைகளாகவும், ஆத்மார்த்த விசாரணையுள்ளவர்களுக்கு ஞாயமாகவும் விளங்குவது சகஜமே!

## ஆறும் அத்தியாயம்.

### சர்வ நிகழ்ச்சிகளுக்கும் கடவுளே ஆதாரம்.

"கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலாசிரியர் தமது நூலின் ஆறும் அத்தியாயத்தில் கடவுளால் நடப்பது ஒன்றுமில்லை என்ற தலைப்பின்கீழ் விவரிப்பதாவது.—

"இதுகாறும் நமக்குத் தெரிந்தவரையில் இப்பிரபஞ்சத்தில் நமது உலகைத்தவிர வேறு பலவித பொருள்களிருப்பதாகத் தெரிகிறது. நமது உலகைப்போன்று நவகிரகங்களெனப்படும் இதர எட்டு உலகங்களும் எந்தவிதமான உயிரும் இருப்பதற்குத் தகுதியான இடமாக இல்லையென்று யூகிக்கலாம். அந்த உலகங்களில் சிலவற்றில் நமது பூமியிலுள்ள பொருள்களிருப்பதாய் தூரதிருஷ்டி கண்ணாடி மூலமாக யூகிக்கப்படுகின்றது. மற்ற உலக வஸ்துக்கள் ஆவிமயமாக இருக்கக்கூடுமென யோசிக்க ஆதாரங்களிருக்கின்றன. புதன், சுக்கிரன், அங்காரகன் முதலிய சிறு கிரகங்களில் தாக்கும் சூரியனுடைய வெப்பம், நமது உலகத்தைவிட குறைந்தும், மிகுந்துமிருக்கிறது. வியாழன், சனி, புதன், யுரேனஸ், நெப்சூன் முதலிய பெரிய கிரஹங்களில் குளிர் அதிகமாக இருக்கக்கூடுமென யூகிக்கப்படுகிறது 1930-ம் வருஷம் கண்டுபிடிக்கப்பட்ட புலேவெனுப் கிரகத்தில் தாங்கக்கூடாத குளிர் இருக்குமென்பதற்குத் தடையில்லை. இவ்வித வஸ்துக்கள் குழம்பியும், வெப்பமும், குளி

ரும், அதிகரித்து பனிப்புயலடித்துக்கொண்டு மிருக்கின்றன. இவை யாவும் பூதபௌதீக குணத்தால் நிகழ்கின்றனவேயன்றி கடவுள் உதவி வேண்டுவதில்லை. மதஸ்தர்கள் கூறும் கடவுள் ஒருவர் இருப்பாராயின் அவருக்கு நவக்ரகங்களில் எவ்வித வேலையுமில்லை என்றே தீர்மானிக்கலாம்.''

மேலும் அங்கு காணக்கிடப்பது.—

“நமது சூர்யன் கோடானுகோடி நட்சத்திரங்களில் ஒன்று. சூரியனிடத்து எல்லாப் பொருள்களின் மூலவஸ்தும் (Elements) இருக்கின்றன. இந்த Elements ஒன்றோடொன்று மோதிக்கொள்வதால் அனல்கொண்டு கோடானுகோடி தூரம் சூர்ய கிரணங்கள் எழுகின்றன. நமது வீடுகளில் கட்டையோ கரியோ எரிவதுபோல் சூரியனிடத்து வஸ்துக்கள் எரிவதால் வெளிச்சமும், அனலும் உண்டாகின்றன. கட்டை, காடு, கரிபற்றி எரிய கடவுள் ஒருவர் வேண்டாமைபோல் சூர்யன் பற்றி எரிவதற்கு கடவுள் அனுவசியமன்றோ? சில நட்சத்திரங்கள் சூர்யனைவிட கோடிப் பங்கு பெரிதாயிருக்கின்றன. அவைபோன்ற நட்சத்திரங்கள் கோடிக்கணக்காக விருக்கின்றன. இந்த நட்சத்திரங்களுக்கு அப்பாலும், மத்தியிலும் வெளியிருக்கின்றன. இந்த வெளிக்கப்பாலும் நட்சத்திரக் கூட்டங்களடங்கிய வெண்மாசிக் கூட்டங்களிருக்கின்றன. அவைகளுக்கப்பாலும் வெளியிருக்கின்றன. இந்தப்படியான அகண்டாகாரப்பாழ் வெளியில் கடவுளுடைய வேலைதான் என்னவென்று மனிதன் சிந்தனைக்கு எட்டவில்லை. சிந்தனைக்கு எட்டாத வேலையை இல்லையென்று கூறலாமன்றோ''

இப்பூமியும், இப்பிரபஞ்சத்திலுள்ள இதர கிரகங்களும் மேல்நாட்டினரால் புதிதாய் கண்டுபிடிக்கப்பட்ட கிரகங்களும், அவற்றின் அமைப்பு, கதி முதலியவைகளும், பூதபௌதிக குணத்தால் ஏற்பட்டவையென்றும், கடவுள் உதவி வேண்டுவதில்லையென்றும் கூறும் சங்கைகளுக்கு முந்திய அந்தியாயங்களில் விளக்கமாக விடை கூறியிருக்கின்றோம். பகுத்தறிவாளர்கள் மேல்நாட்டு ஜடதத்துவ ஆராய்ச்சியாளர் அபிப்பிராயத்தைக்கொண்டு கடவுள் இல்லையென்று கூறுகிறார்களே ஒழிய, தங்கள் சுயாநுபவ ஆராய்ச்சி விவேகத்தைக்கொண்டு கூறுவதாய்த் தெரியவில்லை. மேல்நாட்டு ஜடதத்துவ விஞ்ஞானிகளைப்போல், மேல்நாட்டு ஆத்மதத்துவ மெஞ்ஞானிகளும்

அனேகர் உளர். அவர்கள் கூறுவதை இப்பகுத்தறிவாளர்கள் ஏன் பிரமாணமாகக் கொள்ளக்கூடாது?

"லோகாராட்டியரான அந்தப் பராபர வஸ்து தாம் படைத்த சகலத்திற்கு மிடையில் இராஜாவாகவும், நியந்தாவாகவுமிருக்கிறார்" என்று (Plato) பிளாடோ என்பவர் சொல்லுகிறார். "கடவுள் தனது சிருஷ்டிப் பொருள்களில் மறைந்து இருந்தும், அவர் இருப்பை மறைக்கும் நாஸ்திகரை இடிக்கிற இடியினால் கொல்லும்படியான பயத்தைக்காட்டி தனது மிகத் தூய்மையான பூரணத் தன்மையைக் காட்டுகிறார்" என்று (Sehiller) செஹில்லர் என்பவர் கூறுகிறார். "கடவுளுடைய பெயர் இன்னதென்றும், கடவுளை நம்புவோன் இன்னவனென்றும், கடவுளை நம்பாதவன் இன்னவனென்றும் யாராகிலும் துணிந்து சொல்லக்கூடுமோ!" என்று (Goethe) கோத்தி என்பவர் கூறுகிறார். "கடவுள் சகலத்தையும் பார்க்கிறார். ஆனால் அவரைப் பூரணமாகப் பார்க்கமுடியாது" என்று (Euripides) யூரிபைட்ஸ் என்பார் சொல்லுகிறார். "கடவுள் இந்த உலகத்தின் புறம்பாகிய வெளியிலன்றி இந்தப் பிரபஞ்சத்தின் உள்ளாகவே யிருக்கிறார். சகல வஸ்துக் கூட்டங்களிலும் பூரணமாக நிறைந்தும், சகலத்தையும் பார்த்தும், அவைகள் யாவும் ஒன்றுக்கொன்று பொருந்தும்படி செய்துநடத்தும், விண்ணுலகத்திற்கு விகசிதமானவெளிச்சத்தையும் கொடுக்கிறார். பிரபஞ்சத்துக்குப் பிராணனும், பூலோகத்துக்குப் பிதாவுமாகவிருந்து சகலத்தையும் ஜீவலிக்கச்செய்கிறார்" என்று (Pythagoras) பிதாகரஸ் என்பார் உரைக்கிறார். "விண்ணுலகத்தையும், மண்ணுலகத்தையும், பேரலைகளையுடைய கடல்களையும், சண்டமாருதத்தையும், படைத்த சத்திய ஸ்வரூபியாகிய கடவுள் ஒருவர் உண்டு" என்று (Sophocles) ஸ்பாகில்ஸ் என்பார் கூறுகிறார். "எவர் உலகாராட்டியராகவும், அழிவற்றவராகவுமிருக்கிறாரோ, அவரை நேராய் அறிந்து அடைய முயலுங்கள். அவர் சுயம்புவான ஒருவர். அவரிடமிருந்தே சகலமும் ஜனிக்கின்றன. அவருடைய சக்தி எங்கும் பிரகாசிக்கின்றது. யாவரும் அவரைப் பூரணமாய்ப் பார்க்

க்கூடாதவராக இருப்பினும் அவர் யாவற்றையும் பார்க்கிறார்' என்று (Orpheas) ஆர்பியஸ் என்பவர் கூறுகிறார். "நாம் எவ்வளவு சுயாபிமானமுள்ளவர்களாக விருக்கினும், இஸ்பானியர்களைப் பார்க்கிலும் எண்ணில் மிகுந்தோரன்று. பலத்தில் அகாலியர்களைப்பார்க்கினும் அதிகரித்தோமில்லை. தந்திரத்தில் கார்த்திஜீனியர்களையும், வித்தையில் கிரேக்கர்களையும் வென்றோமில்லை. ஆயினும் தெய்வ பக்தியிலும், வைதீகத்திலும் எத்தேசத்தாரிலும் மேன்மையுற்றிருக்கின்றோம். அமிதகராகிய தேவர்களுடைய ஆளுகைக்கும், ஆக்கினைக்கும் சகலமும் உட்பட்டிருக்கின்றனவென்றும், பூரணமாக அறியும் ஞானத்தில் சிறந்தவர்களாக இருக்கிறோமென்றும் (**Ciciro**) சிசிரோ என்பவர் சொல்லுகிறார். "நமக்கு உள்ளும் வெளியிலும் பார்க்கும் சகலமும் பரதந்திரமாகவும், அபூர்ணமாகவுமிருக்க நமது கருத்தில் மாத்திரம் ஒரு அநந்தபூரண சுவதந்திர வஸ்து இருக்கவேண்டுமென்னும் எண்ணம் எப்படி வந்தது" என்று (**Descarts**) டிஸ்கார்ட்ஸ் என்பவர் வினவுகிறார். "சர்வசக்தியும், சர்வஞ்ஞனுமான பகவானில்லாமல் அகிலாண்டங்கள் ஜெனிக்கவும், பிரகாசிக்கவுமாட்டாது. ஆதித்தனும், மற்ற கிரஹாண்ட தூமகேதாதிகளும் ஞானமுடைய பராபர வஸ்துவினாலன்றி சூன்யத்திலிருந்து உண்டாகமாட்டாது" என்று (**Newton**) நியூட்டன் சாஸ்திரி செப்புகிறார். "இப்பிரமாண்டமானது, அந்தர்யாமியாய் ஆளாநின்ற கடவுளாகிய ஓர் மனது இல்லாமல் வீற்றிருக்கிறதென நம்புவதைவிட லீஜண்டு, டால்மண்டு, அலிகொரான் முதலிய கிரந்தங்களில் காணப்பட்ட கட்டுக்கதைகளை நம்புவது எனக்கு எளிதாயிருக்கும். ஆகவே, நாஸ்திகத்தை விலக்க அற்புதங்களைச் செய்யவில்லை. ஏன்? எனில் அவனது சாதாரணமான சிருஷ்டிப் பொருள்கள் அதன் குற்றத்தைக் காட்டுகின்றது. அற்பமான தத்துவ விசாரணை மனிதர் மனதை நாஸ்திகத்தை நோக்கும்படிச் செய்யினும், ஆழ்ந்த தத்துவ விசாரணை மனிதர் மனதை ஆஸ்திகத்திற்குக் கொண்டு வருகிறது" என்று (**Lord Bacon**) பேக்கன் பிரபு சொல்லியிருக்கிறார். காடு கட்டை கரி, இவைகள்

பற்றி எரிவதற்கு பூமியினுள்ளே அனுகூதமாயிருக்கும் அக்கினி அவசியம் வேண்டப்படுவதைப்போல் காடு, கட்டை, கரி முதலியவையில்லாத சூரியன்பற்றி எரிய ஜீவாதார மான அக்கினி அவசியமாயிருக்க, அநாவசியமென்று எப்படி கூறக்கூடும்? சூரியன் ஓர் அக்கினிபிண்டமாகும். அதனுள் வெளிப்பிரபஞ்சத்திலுள்ள (**Elements**) மூலவஸ்துக்கள் எப்படிவந்து சேர்ந்தன? அணுத்திரள்கள் ஒன்றோ டொன்று, கலந்து இயங்குவதற்கும் சாதாரண பரமா ணுக்கள் கலந்து அணுத்திரள்களாவதற்கும், அவைகள் இயங்குவதற்கும் ஓர் பிரத்தியேகமான சக்தி வேண்டுமல் லவா? அச்சக்தியிலல்லவோ, (**Elements**) மூலவஸ்துக்க ளிருந்திருக்கவேண்டும். அகண்ட ஆகாய வெளியில் அனேக கோளங்களையும், நட்சத்திரப் பிளம்புகளையும் வெண்மாசிகளையும் இடையிடையே பல கோளங்களையும் ஆகாய வெளியில் கண்டுபிடித்த பகுத்தறிவாள அறிஞர்க ளுக்கு அக்காட்சிகளின் சூட்சம சக்தியான ஜீவசக்தியை யும், அதற்காதாரமான பரதெய்வத்தையும் ஏன் காண முடியவில்லை? அவைகளை உணர தூரதிருஷ்டி, அணு திருஷ்டி கருவிகளால் முடிவதில்லை. அக்காரணங்கொண் டே, மனித சிந்தனைக்கு அவைகள் எட்டவில்லையென்று கூறிவிட்டார்கள். மனித சிந்தனை யென்பது பிரகிருதியை ஆராய்வதனால் முடிந்த விசாரணையின் முடிவேயென்று பகுத்தறிவாளர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். சிந்தனைக்கு எட்டாத வேலையை இல்லை என்று கூறலாமென்கிறார்கள். வித்து மரமானபின் அதில் பூக்கும் மலரிலுள்ள வாசனை யையாவது, காய்த்துப் பழுக்கும் கனியிலுள்ள ருசியை யாவது, வித்தாயிருக்கும்போது அவற்றை நுகர-சுவைக்க, வாசனையோ, ருசியோ இல்லாத சிந்தனைக்கு எட்டாத கா ரணத்தால் அவைகள் அவ்வித்தில் இல்லையென்று கூறலா குமோ! ஜலரூபமாயிருக்கும் சுக்கிலத்தில் அணுதிருஷ்டி கண்ணாடியால் சோதித்துப் பார்க்கில் சுக்கிலத்தில் கை யோ, காலோ, முகமோ ஆண் பெண் வேற்றுமையோ காணக்கூடுமோ! சுக்கிலத்தில் அவைகள் சிந்தனைக்கெட் டாதிருப்பதினால் அதில் அவயவங்களோ, ஆண் பெண் வேற்றுமையோ இல்லை என்று சொல்லலாகுமா? மனித

தன பருவகாலத்தில் ஆத்ம ஞானியாகவோ, நாஸ்திகனாக வோ, அரசியல் அறிஞனாகவோ, ஆவான் என்றதோற்றம் அவன் குழந்தைப்பருமாயிருக்கும்போது அவன் பின்நிகழ்வுகள் மனித சிந்தனைக்கு எட்டாதிருப்பதால் அவன் அவ்வாறு ஆகான் என்று தீர்மானித்து விடுவதா? பாலியம், வயோதிகம் முதலிய பருவங்களை யடையும் அவயவ பருவ வேற்றுமைகள் குழந்தை பருவத்தே ஆராயின் சிந்தனைக்கே எட்டாதிருக்க அப்பருவங்கள் இல்லையென்று சொல்லலாகுமா? பிறந்த மக்கள் எந்தக்காலத்திலும் இறந்துபோவார்கள் என்ற நியதியிருப்பினும் காலத்தை நிச்சயிக்க பாலியத்தில் ஆராய்ந்தால் அது சிந்தனைக்கு எட்டுவதில்லை. ஆதலால் இறப்பு நியதியில்லையென்று சொல்லிவிடுவதோ! இதுதான் பகுத்தறிவாளரின் பகுத்தறியும் சிந்தனையோ! சிந்தனைக் கெட்டாத விஷயங்கள் இப்பௌதீகத்துள் எவ்வளவோ யிருக்கின்றன. அவைகளை இல்லையென்று கூற முடியுமோ! அதிக சூட்சமங்களை மனமய சூக்கும திருஷ்டியே உணரமுடியும்.

" உலகப் பொருள்கள் யாவும் Gas ஆவிமயம், Liquid நீர்மயம், Solid கனத்தமயமாகவும் இருக்கின்றன. இந்நிலவரத்தையொத்த பொருள்கள் யாவும் 90 பூதங்களாகப் பிரிகின்றன. மூலப்பொருள்கள் அணுக்கள் சையோகத்தினால் Atoms வெவ்வேறுகின்றன. இவ்வணுக்களும் பரமாணுக்களின் கலப்பாகும். இவைகளின் சையோகத்தினால் அணுக்களும், அணுக்களின் சையோகத்தால் மகத்துக்களும் உண்டாகின்றன. பற்பல கலப்புற்றப் பொருள்களும், சையோகத்தாலுண்டாகின்றன. இவைகளுக்கு பூதபௌதீக குணங்களே காரணமாகும். நீர் ஆவியாகவும், ஆவி நீராகவும், நீர் மண்ணாகவுமாறுகிறது. சூரியனிடத்திலுள்ள உஷ்ண அணுக்கள் துப்பாக்கி குண்டுகளைவிட வேகமாக ஓடுகின்றது. அதனால் வெளிச்சமும் அனலும் உண்டாகின்றது. இவ்வித சலனங்களுக்கு ஆதியந்தமிருப்பதாக எண்ணவுமிடமில்லை. இந்த அசைவு உயிரற்ற வஸ்துக்களிடத்தும், உயிருள்ளவைகளிடத்தும், உலகங்கள், நட்சத்திரங்கள் உலகப் பொருள்களிடத்தும் நாம் காண்பதாகும். பிரபஞ்சம் பொருள்களாவதும், அழிவதும் இந்த சலனம் தான். சிருஷ்டி, ஸ்திதி, சங்காரமெனும் மூவகை வேலைகளும் இந்த சலனத்திற்கே பொருந்தும். நமது சலனத்தின்

பிரசண்ட ஏகாதிபத்தியத்தில் மதஸ்தர் தொழும் கடவுளுக்கு என்ன வேலை என்று கேட்கிறோம்’’ என்கிறார் “ கடவுளும் பிரபஞ்சமும் ’’ என்னும் நூலாசிரியர். மேல்கூறிய சகலத்திற்கும் சலனமே காரணமென்றால் அசேதனமாகிய அந்த ஜடப்பொருள்கள் சேதனமின்றி சலிக்குமா? உலகப்பொருள்கள் யாவும், **Gas, Liquid, solid** ஆவிமயம், நீர்மயம், ‘கனமயம், ஆகியனவாகவும், இவைகள் 90 விதங்களாக மாறுவதற்கும் ஜீவசக்தியின் சம்பந்தமில்லாமல் எப்படி மாறுந்தன்மையடையும்? கடினத்தன்மை நீராகவும், நீர் ஆவியாகவும், யாதொரு சம்பந்தமின்றி மாறிவிடுமா? கடினத் தன்மையுள்ள கற்கள் பொடியாவதும், பொடியானவை ஜலத்துடன் கலந்து கரைந்து ஜலரூபமடைவதும், அந்த ஜலரூபம் அக்கினியின் சம்பந்த வேகத்தால் ஆவியாவதும் மாறுவதுமாகிய சலனத்திருக்கு எது கார்ரணமோ அதையே “கடவுள்’’ என்று ஆஸ்திகர்கள் கூறுகிறார்கள். கடின பதார்த்தங்களை ஆவிரூபமாக மாற்ற மனிதன் எத்துணையோ உபகரணங்களைக் கொண்டு முயற்சிக்கிறான். பிரபஞ்ச தோற்ற ஒடுக்கங்களுக்கு உபகரணங்களாலும், முயற்சியுமில்லாது எப்படி முடியும்? இவ்வண்ட கோடிகள் நிறைந்த ஆகாயவீதியில் சில வெண்ணிறமாயும், சில மஞ்சள் நிறமாயும், வெண்மணல் நிறமாயும், பலவைர இரத்ந பொடிகளை போன்றதாயும் உள்ள தாரகா கனங்களும் பிரகாசிக்கின்றன. அவைகள் அநந்தங்கோடி மைல் தூரங்களில் அநந்தங்கோடி வருஷங்களாக ஆவிரூபமாய் சுழன்றுகொண்டிருந்தும், அவைகளினிடத்தில் ஜகதீசனுடைய சுவாசங்களென சொல்லத்தகும் (**Oxygen, Hydrogen**) முதலிய மூல காரண பூதங்களும், அவருடைய இச்சா சக்தியால் அவ்யக்தம், அல்லது மூலப்பிரகிருதியின் ஸ்வரூபமாகிய பரமாணுவை **Ether** என்பது தாக்க, அது **Electros** என்னும் மின்தாதுக்களாக மாற்றப்படுகின்றன. அம்மின்தாதுக்கள் பிரகாச அணுக்களாக (**Radium**) மாற்றப்பெற்றும், அப்பிரகாச அணுக்கள் சூட்சம ஏக அணுக்கள் (**Atoms**) ளாக மாற்றப்பெற்றும், அவைகள் நாளடைவில் அணுத்திரள்கள் எனும் **Molecules** ஆக மாற்ற

பட்டும், அவ்வணுத்திரள் கூடி முன்னுக்கும், பின்னுக்கு மாக இழுக்கும் தள்ளும் சக்திகளால் பந்தப்பட்டு சுழல் வதனால் அக்நி பிண்டங்கள் (Mosses) ளாக மாற்றப்பட் டும், அவ்வக்நி புகைகளுடன் அனேககோடி வருஷங்கள் சுழன்றுகொண்டிருக்கின்றன. அவ்வக்நி ரூபமான ஆவிக ளெல்லாம் திரண்டு சுழன்று வருவதனால் கோளாகார பிண்டங்களாகி, நாளாவட்டத்தில் நரர்கள் வசிக்கத்தக்க இந்த உலகம் போன்ற பல பிரமாண்டங் களாகின்றன. இவ்வாறாக பஞ்சபூதங்கள் மாறுவதற்கு யாதொரு பொரு ளின் முயற்சியின்றி சலனமே காரணமென்றும், பூதபௌ தீக குணமே காரணமென்று கூறிவிட்டால் அறிவுடை யோர் எவரும் ஒப்புக்கொள்ளார். அற்ப காரியங்களுக் கும் மனிதனுடைய முயற்சி எப்படி தேவையாயிருக்கிற தோ, அதுபோல் இவ்வபாரமான பிரபஞ்ச இயக்கங் களுக்கு அபார சக்தியுடைய வஸ்துவின் முயற்சி அவசிய மல்லவா! அம்முயற்சியுடைய பொருளைத்தான் கீழ்நாட் டினர் தொன்றுதொட்டு "கடவுள்" என்று கூறிவருகிறார் கள். சலனத்திற் கப்பால் அச்சலனத்திற்குக் காரணம் கண்டுபிடிக்கமுடியாவிட்டால் இப்பிரபஞ்சத்திற்கு ஏகாதி பத்திய கடவுள் ஒருவர் இல்லையென்று கூறிவிடுவதா? ஆகவே, மேல்கூறியவற்றால் இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி, ஸ்திதி, லயங்களுக்கு ஏகாதிபத்ய கடவுள் என்ற ஒன்று உண்டு என்றும், அவ்வஸ்துவி னிருப்பால் இப்பிரபஞ்சம் தொழிலை யடைந்து நடைபெறுகிற தென்றும் சித்தாந்த மாகிறது. பூத, பௌதீக குணமென்பதையும், சலன மென்பதையும், இப்பிரபஞ்சத்தினின்று வேறு பிரித்து அறியக்கூடியவை யன்று. அக்குணங்களும், சலனமும் இல்லாவிட்டால் திருசியமாகிய இப்பிரபஞ்சமு மில்லை. ஆதலால் பௌதீக குணமும் சலனமும் பிரபஞ்ச குணமா கிறது. அவ்வாறிருக்க, சலனமும் குணமும் பிரபஞ்சத் திற்குக் காரணமென்பது எப்படி விஞ்ஞான அறிவுக்கு ஞாயமாகும்? பூவுக்கு மணமும், மணிக்கு ஓசையும்போல் பிரபஞ்சத்திற்கு பௌதீக குணமும், சலனமுமிருக்கின் றன. பூவுக்கும், மணிக்கும் சிருஷ்டி கர்த்தா மணமும், ஓசையுமல்ல. அதுபோல் இப்பிரபஞ்சத்திற்குக் கர்த்தா

பௌதிக குணமும் சலனமும் அன்று என்பது சித்தாந்தமாகும்.

---

## ஏழாவது அத்தியாயம்.

### நன்மை தீமைகளுக்கு அதீதர் 'கடவுள்.'

"கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலின் ஏழாவது அத்தியாயத்தில் "கடவுள் நல்லவரா? கெட்டவரா?" என்ற தலைப்பின்கீழ் காணப்படுவதாவது.—

"கடவுள் ஒருவர் இருப்பாராயின் அவர் நல்லவரா ? கெட்டவரா என்ற கேள்விக்கு மதவாதிகள் என்ன சமாதானம் சொல்லுகிறார்கள் என்று பார்ப்போம். எந்த மதஸ்தரும் நாம் மனிதனைத் தீர்க்கமாக நல்லவனென்றாகிலும் கெட்டவனென்றாகிலும் மதிப்பதுபோல் கடவுளை மதிப்பதில்லை. ஆனால் எல்லா மதஸ்தரும் பொதுவாக நல்லவரென்றே சொல்லுகின்றார்கள். எப்படி? அதாவது எந்த நடவடிக்கையால் அவரை நல்லவரென்று சொல்லுகின்றீர்கள் என்றால் அதற்குச் சரியான விடை இல்லை "கிருபாநிதி," "காருண்யமூர்த்தி," "தயாபரன்," "ஆபத்பாந்தவன்," என்று தங்கள் கடவுளாகிய விஷ்ணுவை வைணவர் துதிக்கின்றார்கள். சைவரும் "சிவம்" என்றால் மங்களம் என்று தங்கள் கடவுளை வாழ்த்துகின்றார்கள். (God is good) "கடவுள் நல்லவர்', என்று கிறிஸ்துவர் சொல்லுகின்றார்கள். வேதாந்திகள் தங்கள் கடவுளுக்கு குணமுண்டென்று சொல்வதாகத் தெரியவில்லை. "குணாதீதன்" "குணரகிதன்" மனவாக்குக் காரியத்திற்கு எட்டாதவன்" என்று வழங்குகின்றார்கள். இந்து சாசனங்களில் (Philosophies) அதாவது வேதாந்தம், சாங்கியம், மீமாம்ஸம் முதலிய தத்துவநூல்களில் கடவுள் குணத்தைக் குறித்து ஒன்றும் சொல்லுவதாக இல்லை. சாங்கிய தத்துவத்தில், ஈஸ்வரனே கிடையாதாகையால் அவர் குணத்தைப்பற்றி பேசவேண்டிய அவசியமில்லை. ஆயினும் அதிலிருந்து முளைத்த யோக தர்சனத்தில் ஈஸ்வரனைக் குறித்துப் பேசப்பட்டிருக்கிறது யோகத்தில் கூறியுள்ள குணங்கள் மனித குணத்தை விசாலப்படுத்தி அதை ஈஸ்வரன் மேலேற்றி யிருப்பதாகவே தெரிகிறது. வேதத்தில் (இருக்கு

வேதம்) கடவுள் மனிதனைப் போலவே சில விஷயங்களில்
நடப்பதாகச் சொல்லுகிறபடியால் மனிதனுக்குள்ள குணங்
களை வேதத்தில் கூறியுள்ள கடவுள் வகித்திருப்பதாகக்
காண்கின்றோம்.”

மனிதர்களுக்கும் மற்றுமுள்ள ஜீவர்களுக்கும் விடயத்தி
லுற்ற இராகத் துவேஷங்கள் கடவுளுக்கு இல்லை என்
பதே எல்லா ஆஸ்திக மதவாதிகளுக்குமுள்ள முடிவா
கும். இராகத் துவேசத்தால் தான் சகல சங்கற்ப விகர்ப்
பங்களும் சிருஷ்டி காரியங்களும் ஏற்படுகின்றன. இவ்
வியஷ்டி நிகழ்வுகளுக்கு சமஸ்டியாகிய ஜீவசத்தியே
கடவுள் என்று கூறப்படுகிறது. சைவர், வைஷ்ணவர்,
கிறிஸ்துவர் முதலியவர்கள் சொல்லும் கடவுளர்கள்
சகுணக் கடவுளர்களாகும். ஆனால் வேதாந்திகள்
சொல்லும் கடவுள் என்பது வியஸ்டி ஜீவர்களுக்கும்
சகுணமென்னும் நாமரூபக் கடவுளர்களுக்கும் சமஸ்டி
ஆத்மாவாகிய பரம்பொருளேயாகும். மனிதனுடைய
ஞானேந்திரிய, கர்மேந்திரிய அந்தகரண செயல்களுக்கு
மனிதனுடைய ஆத்மாவாகிய கூடஸ்தன் பிரகாசத்தைக்
கொடுத்துக்கொண்டும், ஜீவசாக்ஷியாக இருந்துகொண்டும்
சுகதுக்கங்களில் எப்படி சம்பந்த மற்றிருக்கிறதோ, அது
போல் சகல பிரபஞ்ச நிகழ்வுகளுக்கும் பிரகாசத்தை
அளித்து ஈஸ்வர சாக்ஷியாக அசங்கனுயிருப்பதே வேதாந்
திகள் கூறும் கடவுளாகும். எனவே அப்பிர்ஹமத்திற்கு
குணாதீதம் குணரகிதம், மனவாக்கு காயத்திற்கு எட்டா
தது என்று கூறுகிறார்கள். இந்து சாசன நூல் கர்த்தாக்
களாகிய (philosophers) தார்ப்பரியங்களை இங்கு எடுத்
துக் காட்டுகிறோம். ஜகத்காரணமோ பிரதானம். அது
அசேதனமென்று சாங்கியர்கள் கூறுகிறார்கள். அவர்கள்
பிரகிருதி, புருஷன், ஜீவன் இம்மூன்றுக்கும் ஆதாரமாக
பிரதானம் எனும் ஓர் காரணப் பதார்த்தத்தை ஒப்புகின்
றனர். பசுபதியே ஜகத்காரணமென்றும், அவரே சேதன
மென்றும், ஜீவனைவிட வேறு என்றும், அவரே உபாஸ்ய
ரென்னும் பாசுபதர்கள் கூறுகிறார்கள். பகவானுன வாசு
தேவர், ஜகத்திற்குக் காரணமென்று பாஞ்சராத்திரிகள்
கூறுகிறார்கள். பரிணாமி, நித்தியன், சர்வஞ்ஞன், ஜீவனே

டும் ஜகத்தோடும் பின்னமாயும், அபின்னமாயுமிருக்கிற
வன் ஈஸ்வரன் என்று ஜைனர்களும், திரிதண்டிகளும்
கூறுகிறார்கள். ஜெகத்காரணமான பரமாணுவையாவது
அல்லது ஜீவனையாவது சர்வஞ்ஞத்வ முதலிய குணங்களு
டன் கூடினதாக உபாசிக்கவேண்டிய தென்றும் மீமாம்சகர்
கள் கூறுகிறார்கள். நித்யஞான குணங்களுடன் கூடின
வன் ஈஸ்வரன். அவன் சர்வஞ்ஞன். பிருதிவி முதலிய
காரியங்களினால் அனுமானிக்கத் தகுந்தவன். அவன் ஜீவ
னைவிட பின்னன் என்று தார்க்கிகர்களாகிய நையாயிகர்
கள் கூறுகிறார்கள். க்ஷணிகன் சர்வஞ்ஞனென்று சௌ
கதர் (பௌத்தர்களும்) கள் கூறுகிறார்கள். "கிலேச, கர்ம,
விபாக ஆசயங்களால் சம்பந்தப் படாதவனாகவும், நித்திய
ஞான சொரூபனாகவும், பிரதான அம்சமாகிய சத்துவ
குணத்தில் பிரதிபலித் திருப்பதால் சர்வஞ்ஞனாகவும்,
ஜீவனைவிட விலக்ஷணனாகவும் இருக்கிறானென்று பதஞ்சலி
யோகிகள் கூறுகிறார்கள். இவ்வண்ணம் ஒவ்வொருகொள்
கையினரும் அவரவர் ஆராய்ச்சிக்குத் தக்கபடி இப்பிர
பஞ்ச சிருஷ்டிக்குக் கர்த்தாவை ஒப்புகின்றனர். முந்திய
அத்தியாயத்தில் எடுத்துக் காட்டியுள்ளபடி மேல் நாட்
டறிஞர்கள் பலரும் சிருஷ்டிக்குக் கர்த்தா உண்டென
ஒப்புகின்றனர்.

"மேல்நாட்டு, கீழ்நாட்டு மதஸ்கர்களும், தத்துவ விவேசிக
ளும் தம்தம் கடவுளை நல்லவரென்றாகிலும், கெட்டவரென்றாகி
லும் தீர்க்கமாகச் சொல்லுவதைக்காணோம். குணாதீதன்
என்று சொன்னால் யாருக்கு என்ன தெரிந்துவிடும். குண
மின்றி எந்தப்பொருளும் விளங்கமுடியாது. கடவுளுக்கு
குணமில்லாவிட்டால் எப்படி அவர் இருப்பதாகவாவது தெரி
ந்து கொள்ள முடியும்?"

என்கிறார் "கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலாசிரி
யர். நாமரூபமுடைய சகுணக்கடவுளை கர்த்தாவாகக்
கொண்ட கொள்கையுடைய துவைதிகள் தங்கள் கடவு
ளுக்கு குண, கர்ம, காரண, காரியங்களையும் கூறுகிறார்கள்.
அவர்கள், கடவுளை நல்லவரென்றோ, கெட்டவரென்றோ
தீர்க்கமாகக் கூறாவிட்டால் கடவுளில்லை என்ற சித்தாந்த
மாகுமா? அவர்கள் கடவுளை பாரபட்ச மற்றவரென்றும்,

கருணாதியென்றும் கூறுகிறார்களே யொழிய கெட்டவர்
என்று எந்த துவைத,விசிஷ்டாத்வைதிகளும் கூறுவதில்லை.
சாதாரண மனிதவர்க்கத்திலேயே கெட்ட குணமுள்ளவர்
களை மனித வர்க்கத்தினின்று ஒதுக்கி வைப்பது மின்றி
அவர்களை தாழ்ந்த குணமுடையோராகவும் கருதுகிறார்
கள். அவ்வாறிருக்க கெட்டகுணமுடைய ஒரு வஸ்து
வை மனிதவர்க்கம் கடவுள் என்று கருதுவதில்லை. சகு
ணோபாசகர்களனைவரும் தங்கள் கடவுளை நல்லவரென்றே
உபாசிக்கிறார்கள். துவைத விசிஷ்டாத்வைதிகள் தவிர
வேதாந்திகளாகிய அத்துவைதிகள் கடவுளுக்கு அதாவது
சமஷ்டி ஆத்மாவுக்கு குணாதீதம் என்று சொல்லுகிறார்கள்.
குணாதீதம் என்பது சகல குணங்களிலும் சம்பந்தமற்று
ஆனால் ஆதாரமட்டும் உடையது என்பதாகும். குணமின்
றியது என்று தப்பர்த்தம் செய்துகொண்டார்கள். அவர்
கள் கருத்துப்படியே, குணமின்றி எந்தப்பொருளும் விளங்
காது எனும் விஞ்ஞானதத்துவம் எதுவரையில் உண்மை
யென்று பார்ப்போம். மனிதனுடைய அறிவினாலும், இந்
திரிய கருவி கரணாதிகளாலும்,அணுதிருஷ்டி, தூரதிருஷ்டி
முதலிய உபகரணங்களாலும், எத்தனையளவு விளங்கு
கிறதோ, அவ்வளவு தோற்றங்களைமட்டுமே நாம் காண
ஏதுவாகிறது. மேற்கூறிய உபகரணங்களாலும் விளங்
கிக்கொள்ளக் கூடாதவைகளை இல்லையென்று கூறுவதா?
அல்லது குணமின்றியதென்று கொள்வதா? ஜீவர்களின்
சுழுத்தியவஸ்தையில் மனிதனுடைய பிராணகலைகள் இயங்
கிக் கொண்டிருக்கின்றன. மற்றக் கருவி, கருணாதிகளும்
தத்தம் தொழிலை செய்துகொண்டிருக்கின்றன. மனித
னும் பிறருக்கு விளங்கிக்கொண்டேயிருக்கின்றான். அவன்
தன்னை மனிதனென்றாவது தன் அவயவங்களிலுள்ள கருவி
கருணாதிகள் செய்யும் தொழிலையாவது உணராததற்குக்
காரணமென்ன? சுழுத்திய வஸ்தையிலும் சகல குணங்
களின் சம்பந்தம் சமஸ்காரமாயிருக்கிறது. சமஸ்காரத்தி
லிருந்து விருத்திகள் வெளிப்படும்போது ஸ்தூல சூட்சம,
சரீர, கருவி, கரணாதிகளின் செயல்கள் மனிதன் அறிவுக்கு
விஷயமாகிறது. சர்வகுணங்களுமிருக்கும்போழுதே மனி
தனும், இதரபொருள்களும், சுழுத்தியவஸ்தையில் விளங்

கத்தையப திருக்கின்றன. மனிதன் குணத்தால்
சுழுத்தியி ம் ன்னையே உணரக்கூடவில்லை. இதனால்
மனிதன் எ குணங்களுக்கு வேறாயிருக்கிறதென்
றேற்படுகி செ வா? இப்படி சம்பந்தமின்றி பிரகாச
மட்டுமெனி பா ல் ஆத்மா அதீதம் என்று கூறப்படுகிறது.
அதீதம் உ ல் இல்லை எனும் பொருளன்று. உலகப்
பொருள்க ள் சிக்கும் திருஷ்டாவுக்கு குணம், ஆத்ம
சம்பந்தத் விர்த்தி ரூபமானால் அன்றி திருசியமாகிய
பிரபஞ்சம் ங்காது. குணம் என்பது விருத்தியின்
இலக்ஷணமே ன்றி, திருசியத்தில் தனியாக வியக்தமா
கும் பதார்த்தமன்று, எனவே, குணமென்பது விர்த்தியின்
மூலம் தாதாத்மியமாய்ப் பிரகாசிப்பதும், விர்த்தியின்றிய
அவஸ்தையில் அடங்கியிருக்கும் பதார்த்தமாகும். கர்மா
வையும், அநுபவத்தையும் அநுசரித்துத் தொழிலையடையும்
ராசத, தாமத, சாத்வீதமாகிய குணங்களுக்கும் கடவுளுக்
கும் என்ன சம்பந்தமோ தெரியவில்லை. இப்பிரபஞ்ச
குணங்களின் நிகழ்ச்சி யநுபவங்களுக்கு 'பிரகாசத்தை
யளிப்பவர் கடவுள் என்ற தத்துவத்தைக் கொண்டே
வேதாந்திகள் கடவுள் குணாதீதர் என்று கூறுகிறார்கள்.
திருஷ்டாவுக்கு குணமிருந்தால் ஒழிய திருசியத்திலுள்ள
குணங்களால் மனிதன் சகல பொருள்களையு முணரமுடி
யாது. திருஷ்டாவாகிய மனிதனுடைய குணத்திற்கு
ஆதாரமாகிய ஆத்மாவின் பிரகாசம் குணங்களில் சையோக
சம்பந்தப்படாதபோது மனிதனுக்கு சுழுப்தியவஸ்தையும்,
சையோக சம்பந்தப்படும்போது சொற்பனசாகர அவஸ்
தைகளும் ஏற்படுகிறது. சுழுப்தியவஸ்தையில் ஆத்மாவில்
மனிதனின் குணங்கள், லயமடைந்திருப்பதால் மனித
னுக்கு குணமில்லையென்றும், மனிதன் இறந்துவிட்டா
னென்றும் கொள்ளக்கூடுமோ? அதுபோல் கடவுள்
குணாதிதராய் யிருப்பதால் ஏன் பகுத்தறிவாளர்கள் அவர்
இருப்பதாக தெறிந்துகொள்ளக்கூடாது? மேலும் கட
வுளும் பிரபஞ்சமும் எனும் நூலாசிரியர் கூறுவதை கவ
னிப்போம்,

"கடவுள் அபூர்வ காரியங்களை செய்தார் என்ற கற்பனை
களை மனிதர் நம்புவதால் பாமர ஜனங்களுக்கு விளையும் கெடு

திகளுக்கு அளவே இல்லை. விஷநோய்கள் அம்மன், பிடாரி; மாரியாத்தாள், வெள்ளைச்சேலக்காரி, முனீஸ்வரன் முதலிய தேவதைகளால் உண்டாகின்றதென்ற மூட நம்பிக்கை ஏழை மக்களிடம் குடிகொண்டுவிட்டது. 100 வருஷங்களாக செய்து வந்த விசாரணையால் மேற்கண்ட நோய்கள் விஷக்கிருமி களால் ஏற்படுகிறதென்று தெரிந்திருந்தும் ஏழைத் தொழி லாளிகள் மூடவயித்தியம் கழிப்பு, பூசை, பிரார்த்தனை, பலி முதலியவைகளால் நோய்கள் நீங்குவதாக நம்புகிறார்கள். இந்த மூடநம்பிக்கைகளால் அனேகம் குழந்தைகள் சாகின்றன இவ் வித கொடுமையான மூடநம்பிக்கைகளைப் போக்காமல், உயிர் களை காப்பாற்றாமல் வீணாக கதர், மதுபானம் மறியல் முதலிய சொற்பவேலைகளை செய்யச்சொல்வது கொடுமையினும் கொடு மையாகும். இதை யோசியாது காந்தியாரும் அவருடைய திருக்கூட்டங்களும் வியர்த்தமான காரியங்களைசெய்து பாமர மக்களின் துக்கங்களை நீளவைப்பது மிக்க பரிதாபமானதே"

விஷநோய்கள் பரவும் காலங்களில் பாமரஜனங்கள் தங் கள் வாசஸ்தலங்களை பரிசுத்தமாக வைத்துக்கொள்ள முயல்கின்றனர். கிராமங்களிலுள்ள கிருமிகள் உற் பத்தியாகும் குப்பை சாணம் முதலிய அசுத்த பதார்த் தங்களை அப்புரப்படுத்தி :சுத்தம் செய்து வாழை கமுகு தோரணம் முதலியவைகளால் அலங்கரிக்கிறார்கள். கிரா மம் முழுதும் தூபதீபங்களால் அசுத்த வாயுக்களைப் போக் கியும் கிராமவாசிகளும் கிராமங்களும் பரிசுத்தமாக இருப் பதற்காகவே அம்மன், பிடாரி, மாரியாத்தாள் முதலிய தெய்வங்களின் பெயரால் உற்சவங்கள் நடத்துகிறார்கள். அத்தெய்வங்களை கடவுள் என்று கீழ்நாட்டு அறிஞர்க ளில் எவரும் கூறுவதில்லை. பாமரமக்கள் சிறு தெய்வ உற்சவாதிகளால் நோய்க்கு ஆதாரமான அசுத்தவாயு, கிருமி, அசுத்தம் முதலியவைகளை போக்குகிறார்கள். விஷ நோய்கள் கிருமிகளால் ஏற்படுகின்றன என்று கண்டுபிடி த்த மேல்நாட்டினர் அக்கிருமிகள் யாது காரணத்தால் உண்டாகின்றதென்பதை கவனிக்க அவகாசமில்லாதவர் களாய் இருக்கிறார்கள். கீழ்தேசத்து பண்டைய சுதேச அரசர்கள் ஆட்சிகாலத்தில் இந்தியா இப்போதுள்ள நவீன நோய்களை கண்டதேயில்லை. அம்மை, பிளேக், காலரா, இன்புளுயன்ஸா, மலேரியா, யானைக்கால் முத

டும் ஜக்த்தோடும் பின்னமாயும், அபின்னமாயுமிருக்கிற
வன். ஈஸ்வரன் என்று ஜைனர்களும், திரிதண்டிகளும்
கூறுகிறார்கள். ஜெகத்காரணமான பரமாணுவையாவது
அல்லது ஜீவனையாவது சர்வஞ்ஞத்வ முதலிய குணங்களு
டன் கூடினதாக உபாசிக்கவேண்டிய தென்றும் மீமாம்சகர்
கள் கூறுகிறார்கள். நித்யஞான குணங்களுடன் கூடின
வன் ஈஸ்வரன். அவன் சர்வஞ்ஞன். பிருதிவி முதலிய
காரியங்களினால் அனுமானிக்கத் தகுந்தவன். அவன் ஜீவ
னைவிட பின்னன் என்று தார்க்கிகர்களாகிய நையாயிகர்
கள் கூறுகிறார்கள். க்ஷணிகன் சர்வஞ்ஞனென்று சௌள
கதர் (பௌத்தர்களும்) கள் கூறுகிறார்கள். “கிலேச, கர்ம,
விபாக ஆசயங்களால் சம்பந்தப் படாதவனாகவும், நித்திய
ஞான சொரூபனாகவும், பிரதான அம்சமாகிய சத்துவ
குணத்தில் பிரதிபலித் திருப்பதால் சர்வஞ்ஞனாகவும்,
ஜீவனைவிட விலக்ஷணனாகவும் இருக்கிறானென்று பதஞ்சலி
யோகிகள் கூறுகிறார்கள். இவ்வண்ணம் ஒவ்வொருகொள்
கையினரும் அவரவர் ஆராய்ச்சிக்குத் தக்கபடி இப்பிர
பஞ்ச சிருஷ்டிக்குக் கர்த்தாவை ஒப்புகின்றனர். முந்திய
அத்தியாயத்தில் எடுத்துக் காட்டியுள்ளபடி மேல் நாட்
டறிஞர்கள் பலரும் சிருஷ்டிக்குக் கர்த்தா உண்டென
ஒப்புகின்றனர்.

“மேல்நாட்டு, கீழ்நாட்டு மதஸ்தர்களும், தத்துவ விவேசிக
ளும் தம்தம் கடவுளை நல்லவரென்றாகிலும், கெட்டவரென்றாகி
லும் தீர்க்கமாகச் சொல்லுவதைக்காணோம். குணதீதன்
என்று சொன்னால் யாருக்கு என்ன தெரிந்துவிடும். குண
மின்றி எந்தப்பொருளும் விளங்கமுடியாது. கடவுளுக்கு
குணமில்லாவிட்டால் எப்படி அவர் இருப்பதாகவாவது தெரி
ந்து கொள்ள முடியும்?”

என்கிறார் “கடவுளும் பிரபஞ்சமும்” என்னும் நூலாசிரி
யர். நாமரூபமுடைய சகுனக்கடவுளை கர்த்தாவாகக்
கொண்ட கொள்கையுடைய துவைதிகள் தங்கள் கடவு
ளுக்கு குண, கர்ம, காரண, காரியங்களையும் கூறுகிறார்கள்.
அவர்கள், கடவுளை நல்லவரென்றோ, கெட்டவரென்றோ
தீர்க்கமாகக் கூறிவிட்டால் கடவுளில்லை என்ற சித்தாந்த
மாகுமா? அவர்கள் கடவுளை பாரபட்ச மற்றவரென்றும்,

கருணாநிதியென்றும் கூறுகிறார்களே யொழிய கெட்டவர் என்று எந்த துவைத,விசிஷ்டாத்வைதிகளும் கூறுவதில்லை. சாதாரண மனிதவர்க்கத்திலேயே கெட்ட குணமுள்ளவர்களை மனித வர்க்கத்தினின்று ஒதுக்கி வைப்பதுமின்றி அவர்களை தாழ்ந்த குணமுடையோராகவும் கருதுகிறார்கள். அவ்வாறிருக்க கெட்டகுணமுடைய ஒரு வஸ்துவை மனிதவர்க்கம் கடவுள் என்று கருதுவதில்லை. சகுணோபாசகர்களனைவரும் தங்கள் கடவுளை நல்லவரென்றே உபாசிக்கிறார்கள். துவைத விசிஷ்டாத்வைதிகள் தவிர வேதாந்திகளாகிய அத்துவைதிகள் கடவுளுக்கு அதாவது சமஷ்டி ஆத்மாவுக்கு குணாதீதம் என்று சொல்லுகிறார்கள். குணாதீதம் என்பது சகல குணங்களிலும் சம்பந்தமற்று ஆனால் ஆதாரமட்டும் உடையது என்பதாகும். குணமின்றியது என்று தப்பர்த்தம் செய்துகொண்டார்கள். அவர்கள் கருத்துப்படியே, குணமின்றி எந்தப்பொருளும் விளங்காது எனும் விஞ்ஞானதத்துவம் எதுவரையில் உண்மையென்று பார்ப்போம். மனிதனுடைய அறிவினாலும், இந்திரிய கருவி கரணாதிகளாலும், அணுதிருஷ்டி, தூரதிருஷ்டி முதலிய உபகரணங்களாலும், எத்துணையளவு விளங்குகிறதோ, அவ்வளவு தோற்றங்களைமட்டுமே நாம் காண ஏதுவாகிறது. மேற்கூறிய உபகரணங்களாலும் விளங்கிக்கொள்ளக் கூடாதவைகளை இல்லையென்று கூறுவதா? அல்லது குணமின்றியதென்று கொள்வதா? ஜீவர்களின் சுழுத்தியவஸ்தியில் மனிதனுடைய பிராணகலைகள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. மற்றக்கருவி, கருணாதிகளும் தத்தம் தொழிலை செய்துகொண்டிருக்கின்றன. மனிதனும் பிறருக்கு விளங்கிக்கொண்டேயிருக்கின்றான். அவன் தன்னை மனிதனென்றாவது தன் அவயவங்களிலுள்ள கருவி கருணாதிகள் செய்யும் தொழிலையாவது உணராததற்குக் காரணமென்ன? சுழுத்திய வஸ்தையிலும் சகல குணங்களின் சம்பந்தம் சமஸ்காரமாயிருக்கிறது. சமஸ்காரத்திலிருந்து விருத்திகள் வெளிப்படும்போது ஸ்தூல சூட்சம, சரீர, கருவி, கரணாதிகளின் செயல்கள் மனிதன் அறிவுக்கு விஷயமாகிறது. சர்வகுணங்களுமிருக்கும்போழுதே மனிதனும், இதரபொருள்களும், சுழுத்தியவஸ்தையில் விளங்

கத்தையடையா திருக்கின்றன. மனிதன் குணத்தால்
சுழுத்தியிலுற்ற தன்னையே உணரக்கூடவில்லை. இதனால்
மனிதன் ஆத்மா, குணங்களுக்கு வேருயிருக்கிறதென்
றேற்படுகிறதல்லவா ? இப்படி சம்பந்தமின்றி பிரகாச
மட்டுமளிப்பதால் ஆத்மா அதீதம் என்று கூறப்படுகிறது.
அதீதம் என்ருல் இல்லை எனும் பொருளன்று. உலகப்
பொருள்களை தரிசிக்கும் திருஷ்டாவுக்கு குணம், ஆத்ம
சம்பந்தத்தால் விர்த்தி ரூபமாளுல் அன்றி திருசியமாகிய
பிரபஞ்சம் விளங்காது. குணம் என்பது விருத்தியின்
இலக்ஷணமேயன்றி, திருசியத்தில் தனியாக வியக்தமா
கும் பதார்த்தமன்று, எனவே, குணமென்பது விர்த்தியின்
மூலம் தாதாத்மியமாய்ப் பிரகாசிப்பதும், விர்த்தியின்றிய
அவ்ஸ்தையில் அடங்கியிருக்கும் பதார்த்தமாகும். கர்மா
வையும்,அநுபவத்தையும் அநுசரித்துத் தொழிலையடையும்
ராசத, தாமத, சாத்வீதமாகிய குணங்களுக்கும் கடவுளுக்
கும் என்ன சம்பந்தமோ தெரியவில்லை. இப்பிரபஞ்ச
குணங்களின் நிகழ்ச்சி யநுபவங்களுக்கு 'பிரகாசத்தை
யளிப்பவர் கடவுள் என்ற தத்துவத்தைக் கொண்டே
வேதாந்திகள் கடவுள் குணதீதர் என்று கூறுகிருர்கள்.
திருஷ்டாவுக்கு குணமிருந்தால் ஒழிய திருசியத்திலுள்ள
குணங்களால் மனிதன் சகல பொருள்களையு முணரமுடி
யாது. திருஷ்டாவாகிய மனிதனுடைய குணத்திற்கு
ஆதாரமாகிய ஆத்மாவின் பிரகாசம் குணங்களில் சையோக
சம்பந்தப்படாதபோதுமனிதனுக்கு சுழுப்தியவஸ்தையும்
சையோக சம்பந்தப்படும்போது சொற்பனசாகர அவஸ்
தைகளும் ஏற்படுகிறது. சுழுப்தியவஸ்தையில் ஆத்மாவின்
மனிதனின் குணங்கள், லயமடைந்திருப்பதால் மனித
னுக்கு குணமில்லையென்றும், மனிதன் இறந்துவிட்டா
னென்றும் கொள்ளக்கூடுமோ ? அதுபோல் கடவு
குணதிதராய் யிருப்பதால் ஏன் பகுத்தறிவாளர்கள் அவ
இருப்பதாக தெறிந்துகொள்ளக்கூடாது ? மேலும் கட
வுளும் பிரபஞ்சமும் எனும் நூலாசிரியர் கூறுவதை க
ணிப்போம்,

"கடவுள் அபூர்வ காரியங்களை செய்தார் என்ற கற்பனை
களை மனிதர் நம்புவதால் பாமர ஜனங்களுக்கு விளையும் கெடு

திகளுக்கு அளவே இல்லை. விஷநோய்கள் அம்மன், பிடாரி; மாரியாத்தாள், வெள்ளைச்சேலக்காரி, முனீஸ்வரன் முதலிய தேவதைகளால் உண்டாகின்றதென்ற மூட நம்பிக்கை ஏழை மக்களிடம் குடிகொண்டுவிட்டது. 100 வருஷங்களாக செய்து வந்த விசாரணையால் மேற்கண்ட நோய்கள் விஷக்கிருமிகளால் ஏற்படுகிறதென்று தெரிந்திருந்தும் ஏழைத் தொழிலாளிகள் மூடவயித்தியம் கழிப்பு, பூசை, பிரார்த்தனை, பலி முதலியவைகளால் நோய்கள் நீங்குவதாக நம்புகிறார்கள். இந்த மூடநம்பிக்கைகளால் அனேகம் குழந்தைகள் சாகின்றன இவ்வித கொடுமையான மூடநம்பிக்கைகளைப் போக்காமல், உயிர்களை காப்பாற்றாமல் வீணாக கதர், மதுபானம் மறியல் முதலிய சொற்பவேலைகளை செய்யச்சொல்வது கொடுமையினும் கொடுமை யாகும். இதை யோசியாது காந்தியாரும் அவருடைய திருக்கூட்டங்களும் வியர்த்தமான காரியங்களைசெய்து பாமர மக்களின் துக்கங்களை நீளவைப்பது மிக்க பரிதாபமானதே"

விஷநோய்கள் பரவும் காலங்களில் பாமரஜனங்கள் தங்கள் வாசஸ்தலங்களை பரிசுத்தமாக வைத்துக்கொள்ள முயல்கின்றனர். கிராமங்களிலுள்ள கிருமிகள் உற்பத்தியாகும் குப்பை சாணம் முதலிய அசுத்த பதார்த்தங்களை அப்புரப்படுத்தி சுத்தம் செய்து வாழை கமுகு தோரணம் முதலியவைகளால் அலங்கரிக்கிறார்கள். கிராமம் முழுதும் தூபதீபங்களால் அசுத்த வாயுக்களைப் போக்கியும் கிராமவாசிகளும் கிராமங்களும் பரிசுத்தமாக இருப்பதற்காகவே அம்மன், பிடாரி, மாரியாத்தாள் முதலிய தெய்வங்களின் பெயரால் உற்சவங்கள் நடத்துகிறார்கள். அத்தெய்வங்களை கடவுள் என்று கீழ்நாட்டு அறிஞர்களில் எவரும் கூறுவதில்லை. பாமரமக்கள் சிறு தெய்வ உற்சவாதிகளால் நோய்க்கு ஆதாரமான அசுத்தவாயு, கிருமி, அசுத்தம் முதலியவைகளை போக்குகிறார்கள். விஷ நோய்கள் கிருமிகளால் ஏற்படுகின்றன என்று கண்டுபிடித்த மேல்நாட்டினர் அக்கிருமிகள் யாது காரணத்தால் உண்டாகின்றதென்பதை கவனிக்க அவகாசமில்லாதவர்களாய் இருக்கிறார்கள். கீழ்தேசத்து பண்டைய சுதேச அரசர்கள் ஆட்சிகாலத்தில் இந்தியா இப்போதுள்ள நவீன நோய்களை கண்டதேயில்லை. அம்மை, பிளேக், காலரா, இன்புளுயன்ஸா, மலேரியா, யானைக்கால் முத

ஷிய நவீனநோய்கள் அண்ணிய நாட்டாரின் பிரவேசத்
தாலும் ஆட்சியாலும் ஏற்பட்டவையாகும். இந்தியா
முக்கியமாக விவசாயத்தை யுடைய தேசம். ஏழு லெட்
சம் கிராமங்கள் இரண்டு நூற்றாண்டுகளாக நாசமாக்கப்
பட்டுவிட்டன. நகரவாசமே சிறந்ததென்ற நவீனநாகரீக
மோகத்தில் ஆழ்ந்து (Wagon) சுமை ஏற்றும் வண்டியில்
அடைப்பதைப்போல் கிராமவாசிகளில் பெரும்பாலோர்
நகரங்களை யடைந்துவிட்டார்கள். நகரவாழ்வு மோகமும்
விவசாயிகள் காட்டுமிராண்டிகள் என்ற இக்கால கலா
சாலைப் படிப்பும் பட்டங்களைப் பெற்றுக்கொண்டு சரீரம்
நோகாமல் பாமரர்களை ஏய்த்து பணம் திரட்டும் சந்தர்ப்
பமும், மக்களினங்கள் நகரங்களில் சந்தைக் கூட்டம்
போல் கூடுவதற்கு ஏதுவாயிருந்தன. வெளிநாட்டு சறக்கு
களின் விலையேற்றமும் நவீன ஆடம்பர ஆட்சிமுறை நிர்
வாகத்திற்கு வேண்டிய பொருளுக்காக ஏற்பட்ட வரிப்
பளுவும் கிராமவாசிகளில் விவசாயிகளான பெரும்பா
லோர் நகரங்களிலுற்ற இயந்திரசாலைகளில் தொழிலாளர்
களாய் மாறிவிட ஏற்பட்டவைக ளென்பது சரித்திர
ஆராய்ச்சியாளர் கொண்ட அனுபவ முடிவாகும், விஷக்
கிருமிகளால் ஏற்படும் நோய்கள் நகரங்களில் அதிகமாக
மக்களை கொள்ளைகொண்டு போகின்றது மோட்டார்களி
னும், டிராம்வேகம்பி, ரயில்வண்டி, கட்டிடங்கள் இடிவது,
நெருப்புப் பிடிப்பது முதலியவைகளால் அனேககோடி
மக்கள் வருஷந்தோறும் எமனுலகு சென்று கொண்டிருக்
கிறார்கள். இவ்விதமான கொடுந்துன்பங்கள் கிராமாந்
திரங்களில் ஏற்பட்டதில்லை. ஏற்படவும் நியாயமில்லை.
கிருமிகளால் விஷநோய்கள் உண்டாகின்றனவென்ற உண்
மையைக் கண்ட நவீன சுகாதார அறிஞர்கள் வசிக்கும்
நகரங்களில் பாதிக்குமேல் டாக்டர்களும் வழக்கறிஞர்க
ளும் ஏனையோர் ஏழைத்தொழிலாளிகளாகவு மிருக்கிறா
கள். தொழிலாளர்களின், அடிமையையும் அறியாமையை
யும் தங்களுக்கு அனுகூல மாக்கிக்கொண்டு அவர்களி
உழைப்பின் பயனை இவர்கள் அட்டைகளைப்போல் உறிஞ்
சுகின்றனர். அங்கிலையில் அவர்கள் அறைவயிற்றுக் கஞ்
சிக்குக்கூட வழியின்றி பசிப்பிணியால் வாடுகின்றன

தகுந்த ஆகாரமின்றியதால் கிருமிகள் அவர் அவர்கள் சரீரத்திலுள்ளே மலக்குடல்களில் உற்பத்தியாகி அனேக நோய்களுக்குட்பட்டு அகாலமரண மடைகின்றனர். இக் கிருமிகள் மூடநம்பிக்கையால் ஏற்பட்டனவா? மோட்டார், டிராம், ரயில்வே முதலியவைகள் ஓடும் சச்சரவுகளினால் விஷப்புகைகளும் அசுத்த அணுக்கள் சம்பந்தப்பட்ட தூசுகளும் ஜனங்களால் பிராணாயாமம் செய்யப்பட்டு மேக ரோகங்களுக்கும் காசநோய்களுக்கும் ஆளாகி விடுகின்றனர். மண்ணெண்ணெய், பெட்ரோல் மின்சாரம் முதலிய புகைகள் பிரகாசங்களினால் மக்களின் மூளைகள் வரண்டு பைத்தியஆஸ்பத்திரி நிறம்பியும் இருக்கிறது. கண்ணொளி மழுங்கிய ஆண் பெண் அடங்கலும் கண்ணாடி போட்டுக் கொண்டும் காணப்படுகிறார்கள். சமயல் செய்யுமிடமும், மலஜலங்கள் கழிக்குமிடமும் நெருங்கி யமைக்கப்பட்ட மனைகளில் வாழ்வதனால், அம்மலங்களின் அசுத்த வாயுக்கள் ஆகாரப் பதார்த்தங்களிலே பரவி, பேதி, வயிற்றுப் போக்கு முதலிய நோய்களேற்படுகின்றன. ஒருவர் வாய் எச்சில் ஒருவர்க்கு தேவாமிர்தமென்று காப்பி ஓட்டல், கிளப்பு வீடு முதலியவைகளில் பராட்டப்பட்டு வருவதால் ஒருவர் சரீரத்திலுள்ள கிருமிகள், கழிவுநீராகிய எச்சில் வாயிலாக ஒருவருக்கு சம்பந்தப்பட்டு அதனால் காசம் முதலிய அனேகநோய்கள் ஏற்படுகின்றன. அங்குவசிக்கும் பெரும்பாலோரான டாக்டர்களுக்கும், மேல்நாட்டுமருந்தினால் மேல்நாட்டு மக்களுக்கும் தங்கள் வாழ்வையும் உழைப்பின் பயனையும் அர்ப்பணம் செய்துவருகிறவர்கள் நகரவாசிகளாகும். இத்தியாதி நவீனநோய்களுக்கும் சம்பவங்களுக்கும் அம்மன், பிடாரி மாரியாத்தாள் வெள்ளைச்சேலக்காரி என்ற கற்பனை தெய்வங்கள் காரணமாகுமோ? அல்லது மூடநம்பிக்கைகள் காரணமாகுமோ? நவீன நாகரிக வாழ்வும் நகரவாச மோகமுமே காரணங்களாகும். மனிதன் ஒருவன் வெளிவிடும் மூச்சுக்காற்றை மற்றவன் சுவாசிக்க நேர்ந்தால் சீதோஷ்ணஸ்திதி மாறி நோய்க்கு ஏதுவாகுமென்று பண்டைய கீழ்நாட்டறிஞர்கள் உணர்ந்து கிராம வாழ்வும் கிராம அமைப்பின் ஒழுங்கையும் ஏற்படுத்தியிருந்தனர். இப்போது கிராமங்கள் நாசமடைந்ததுமல்

லாமல் கிராமவாசிகள் நகரங்களில்படும் கொடுந்துன்பம் அளவிடற்பாலது. நகரவாழ்வில் நகரமெங்கும் இயந்திரங்களின் விஷப்புகைகளும், மோட்டார்களின் பெட்ரோல் புகைகளும், நிலக்கரிப்புகைகளும், இயந்திர வண்டிகள் ஓடும் வேகத்தால் எழும்பும் அசுத்தத் தூசிப்புகைகளும் சேர்ந்து அவைகளையே அங்கு வசிக்கும் ஜனங்கள் உஸ்வாச நிஸ்வாசம் செய்துவருகிறார்கள். பரிசுத்தக் காற்றையோ நறுமணங்களையோ சுவாசிப்பது துர்லபமாயிருக்கிறது. இதனால் சுவாசப்பைகள் கெட்டுவிடுகின்றன. ஏழைத்தொழிலாளிகளும் நகரவாசிகளில் பெரும்பாலோரும் இக்காரணங்களால் அகாலமரணம் அடைகிறார்களா? அல்லது அம்மன், பிடாரி, மாரி இவைகளின் மூடநம்பிக்கையால் அகாலமரண மடைகின்றார்களா வென்று வாசகர்களே யோசித்துப் பார்க்கவேண்டியது. நகரங்களில் பாதிக்குமேல் நவீனமுறை வைத்தியர்களிருந்தும், கப்பல் கப்பலாக நவீனமுறை மருந்துகள் நகரங்களில் வந்திறங்கியும், ஏழைத் தொழிலாளர்களின் உழைப்பின் பயனைக் கொண்டு அனேக தர்மவைத்திய சாலைகள் நிறுவியும் நகரங்களில் ஏற்படும் அகால மரணங்களும், நோய்க்கூட்டங்களும் ஒழிவதாயில்லை. டாக்டர்களுக்கும், மருந்துகளுக்கும், வைத்திய நிலையங்களுக்கும் ஓயாது வேலை இருந்துகொண்டே யிருக்கின்றன. இவர்கள் 100 வருஷங்களாக நோய்க்குற்ற காரணங்களைக் கண்டுபிடித்ததின் பயன்தான் என்ன? இக்காலம் தேசமக்கள் அகால மரணமடைவதும், நோய் வாய்ப்படுவதும், அஞ்ஞர்களாயிருப்பதும் யாது காரணங்களைக் கொண்டென்பதை ஆராயின் நவீன நாகரிகமும், அதற்காதாரமான அந்நிய ஆட்சியுமே யென்பதை எளிதிலறியலாம். அடிமைப்பட்டதினால் சிறந்த கல்வி கேள்வியில்லா தொழிந்தன. அவற்றால் நாம் நடைப் பிணங்களென சொல்லத்தக்க விதத்தில் வறிஞர்களாகவும், நோய்க்களஞ்சியங்களாகவும் மாற நேர்ந்தது. நம் நாடு வறுமையிலிருந்து விடுபடவேண்டுமேயானால் கிராமவாழ்க்கையிலும், விவசாய விர்த்தியிலும், இதரக் கைத்தொழிற்சாலைகள் அபிவிர்த்தியிலும் மக்கள் தீவிரமாக ஈடுபடவேண்டும். இவையே தேசாபிமானிகளின் முக்கிய தீர்

மாணங்களாகும். நமது மக்கள் இந்நிலைகளை யடைந்து விடுவார்களாயின் சுதந்தரமெய்தி சுகமுற ஏதுவாகும். விவசாயம், வணிகம், கைத்தொழில், தத்துவம் முதலிய வைகளில் நமது மக்கள் பயிற்சிபெற வேண்டுமென்ற பிரதான காரணங்களை மேற்கொண்டே மகாத்மா காந்தியடிகள் கதர் அபிவிர்த்தி, மதுபான விலக்கு, சுதேச சாமான் பிரசாரம், விதேச சாமான் பகிஷ்காரம் முதலியவைகளை ஏற்படுத்தினர். இவைகளை சொற்ப வேலை என்றும், கொடுமை யென்றும் வியர்த்தமான காரியங்களென்றும் சொல்வது பகுத்தறிவின் இலட்சணமென்று பகுத்தறிவாளர்கள் எண்ணுகிறார்கள்போலும் இவற்றால் பாமர மக்களின் நன்மைக்காக உழைப்போர் யார் என்பது தெள்ளென விளங்கும்.

"கடவுள் நல்லவ ரென்றால் புலியையும், ஆட்டையும், சிங்கத்தையும், பசுவையும், பாம்பையும், கும்மைப்பூச்சி, பேதிபூச்சி, சுரபூச்சிமுதலிய கொடியவைகளை என் சிருஷ்டித்தாரெனக் கேட்கிறோம் கடவுள் நல்லவராயிருந்தால் அவரைப்பற்றி ஏன் பயப்படவேண்டும்?"

என்கிறார் அந்நூலாசிரியர். கடவுளைப்பற்றிய இந்தப் பிரச்சனைக்கு முன்பே தகுந்த விடை யளித்திருக்கிறோம். கடவுளுக்கும் நன்மை தீமைகளுக்கும் சம்பந்தமில்லை என்பது பற்றி விளக்கமாக விவரித்துள்ளோம். சொன்னவைகளையே மீண்டும் மீண்டும் கூறப்பட்டிருக்கின்ற இந்த பகுத்தறிவாளர் நூலில் "புனருக்தி தோஷம்" நிறைந்திருக்கிறது. சகல சிருஷ்டிக்கும் பூத பௌதீக குணம் காரணமேயொழிய, கர்த்தா ஒன்றுமில்லை என்று பகுத்தறிவாளர்கள் தங்கள் நூற்களில் கூறுகின்றார்கள். அந்நியதியின் பிரகாரம், அவர்களுக்குப் பெற்றோர்களின் பூதபௌதீக குணங்களிருக்கின்றனவா? அவர்களின் பூத பௌதீக குணங்களாகிய மனோ சலனத்திலில்லாத குழந்தைகள் ஏன் பிறக்கவேண்டும்? சில குழந்தைகள் பிறந்த உடனே மரித்து விடுகின்றன. சில அங்கஈனமா யிருக்கின்றன. சிலதுஷ்ட குணங்களுடனும், சில திருட்டுத் தன்மைகளுடனும், சில காம இச்சைமிக்க தன்மையுடனும், கொலைசெய்தல், போரா

சை கொள்ளல், நபும்சகம், மலடு முதலியவைகளாகவும், சில குழந்தைகள் பெற்றோரின் தோற்றம் குணம் முதலியவற்றில் மாறுபட்டனவாகவும் பிறப்பானேன்? பகுத்தறிவாளராகிய பெற்றோர்கள் தங்கள் தங்கள் பூதபௌதிக குணங்களை சிருஷ்டி துவக்கத்திலேயே தன் சந்ததிகளுக்கு ஏன் புகுத்திவிடலாகாது? அப்படி அவர்கள் செய்ய முடியாமையால் பூதபௌதிக குணம் காரணமென்றது நியாயமாகுமா? பூதபௌதிக குணங்களைக் காரணமெனக் கண்டுணர்ந்த பகுத்தறிவாளர்கள், தங்கள் தங்கள் குண, கர்ம, சுபாவத்தை தங்களினங்களுக்கு சையோக சம்பந்தத்தில் புகுத்தமுடியாதிருக்க, சிருஷ்டியில் பசுவையும், புலியையும், பாம்பையும் விஷக்கிருமிகளையும் ஏன் சிருஷ்டித்தார் என்று கேட்பது எத்துணை சிறந்த பகுத்தறிவாகுமோ விளங்கவில்லை மனிதன் சிருஷ்டிக்கே முறண்பட்ட குணங்களமைந்திருக்க, ஈஸ்வர சிருஷ்டிக்கு குற்றங்கூற ஞாயமுண்டோ! கிரகாண்டங்களுள் ஒவ்வொன்றும் எதிர்மறை சக்திகளினால் இயங்கிக்கொண்டிருக்கிறது எதிர்மறை சக்திகளினால் தான் திருசியம் தோற்ற ஒடுக்கத்திற்கு ஏதுவாகிறது, அதுபோல உலகில் தோன்றும் சகல வஸ்துக்களும், ஜீவர்களும் எதிர்மறை சக்திகளால் ஆக்கப்பட்டவைகளாம்! ஆகையினால் சகல வஸ்துக்களும், தோன்றுவதும், மறைவதுமாயிருக்கின்றன. இந்நிகழ்வுகளுக்கு கடவுள் எப்படி பொறுப்பாளியாவார்? இவைகள் வீண் விதண்டாவாதங்களாகும்; அறியாத மக்களை ஏய்ப்பதுமாகும். ஒருவன் தன் பெற்றோரிடம், மரியாதையுடனும், பயபக்தியுடனும் நடப்பானாகில் பெற்றோர்கள் துஷ்டர்களாவரோ! ஒரு ஊழியன் தன் எஜமானனிடம் பயபக்தியுடனிருந்தால் எஜமான் கெட்டவனாவானோ! ஒரு ஸ்த்ரீ தன் கணவனிடம் பதிவிரதா தன்மையுடனிருந்தால் பதி கொடுமையுள்ளவனாவானோ! நண்பர்கள் ஒருவருக்கொருவர் நட்பு காரணமாக பக்தி விஸ்வாசத்துடன் ஐக்யமாயிருந்தால் நண்பர்களின் அன்பு பகைமைபோன்றதாகுமா? இவற்றைப்போல் கடவுளிடம் மக்களினங்கள் கொண்ட கொள்கைக்குக் கடவுள் எப்படிக் கெட்டவராவார்?

# எட்டாவது அத்தியாம்.

## கடவுளுக்கும் உலகத்திற்கும் சம்பந்தம் உண்டு.

"கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலின் எட்டாவது அத்தியாயத்தில், "கடவுளுக்கும் உலகத்திற்கும் சம்பந்தமில்லை." என்ற தலைப்பின்கீழ் அந்நூலாசிரியர் முந்தின அத்தியாயங்களில் கூறியவற்றையே திரும்ப திரும்பக் கூறி மேலும் விவரிப்பதாவது :—

"நமக்குத் தெரிந்தவரையில் பிரபஞ்சம் என் னென்ன பொருள்களை உடைத்தாயிருக்கிறதென முதலில் அறிந்து கொள்வோம். பிரபஞ்சப் பொருள்களில் நமது உலகம் ஒன்று இவ்வுலகைப் போன்று நவக்ரகங்கள் எட்டு. இந்த ஒன்பது உலகங்களும் நடுவிலிருக்கும் சூரியனைச்சுற்றி ஓடிககொண்டிருக்கின்றன. இந்தக் கூட்டத்தை சூர்யதிட்டம் Solar System என்பார்கள். வால் வெள்ளிகள், எரி வெள்ளிகள், அந்தந்த கிரகத்தைச் சுற்றும் சந்திரர்கள் இவைகள் மத்தியில் கிடக்கும் தூசுக்கள், கிரணங்கள் சேர்ந்துள்ளன. இந்த திட்டத்திலுள்ள பொருள்கள்யாவும், கவர்ச்சி என்னும் சக்தியால் ஒன்றோடொன்று இழுக்கப்பட்டு ஒரேகுடும்பமாக இருந்து வருகின்றன. நமது சூர்யகுடும்பத்திற்கு அப்பால் நட்சத்திரங்களிருக்கின்றன. சில நட்சத்திரங்கள் தனித்தும், சில கும்பலாகவும் ஆகாயத்தில் ஓடிக் கொண்டிருக்கின்றன. இவைகளில் சிலவற்றில் ஆவியும் கலந்திருக்கின்றன. இவை யாவும் சேர்ந்து நட்சத்திரதிட்டம், (Steller System) என வழங்கப்படும். இந்த நட்சத்திர திட்டமாகிய குடும்பத்தில் நமது சூர்யன் அதன்கிரகங்கள், வால் வெள்ளி, எரி வெள்ளி, சந்திரர்கள்யாவும் சேர்ந்தவையாகும். இந்த பெரியகுடும்பத்தில் நமது உலகம் எங்கோர் மூலையிலிருந்து வருகிறது, இந்த நட்சத்திர குடும்பத்தை காலக்ஸி Golasey என்றழைப்பார்கள். இந்த காலக்ஸிக்கப்பால், Metagalaney என்னும் பெரிய நட்சத்திர கட்டங்களிருக்கின்றன. இந்த மெடகாலனியில் கோடி கோடி நட்சத்திரங்கள் உளவாம். இவையாவும் நமது உலகை இருந்த இடத்தில் இருக்கச் செய்யும் கவர்ச்சி Gravtation யில் ஆளப்பட்டு வருகின்றனவாம். இங்கும், அங்கும், எங்கும் கவர்ச்சியால் பிரபஞ்சப் பொருள்கள் சகலமும் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டிருக்கின்றனவாம். இத்தியா

திப்பொருள்களும் மகத்துக்கள் எனப்படும். அம்மகத்துக்கள்
எல்லாம் Atoms அணுக்களின் சையோகத்தால் கூட்டப்பட்
டவைகள். அணுக்கள் பரமாணுக்களால் கூடியவைகள்.
இவைகளுக்கு மேற்பட்டமாலி கூலஸ் (Malecules) என்ற
அணுத்திரள்களிருக்கின்றன. அந்த அணுத்திரள்களால்
தான் நாமும் நமது உலகத்திலுள்ள சேதன, அசேதனங்க
ளும் உருவடைந்திருக்கிறோம். 25-வருடங்களாக செய்துவரும்
ஆராய்ச்சியில் அணுக்களும், அணுத்திரள்களாகிய நாமும் இ
ழுக்கும் சக்தியால் Attraction கட்டுண்டுதனிப் பொருள்களா
க இருந்து வருகிறோம். ஆகையால் சகலமும் கவர்ச்சியால்
கட்டுண்டு பிரபஞ்சத்தில் உலாவுகின்றன. இதைத்தவிர,
வேறெந்த அறிவோ, மனமோ, சைதன்யமோ, சததோ, சித்
தோ, ஆன்மாவோ, கடவுளோ, பிரபஞ்சத்தை நடத்துவதை
நாமறியோம் பிரபஞ்சத்தை ஆராய்ச்சி செய்யும் விஞ்ஞானி
கள் இந்த கவர்ச்சியே பரமாணுக்களிலிருந்து உண்டாகும் பிர
பஞ்சப்பொருள்களுக்கு மூலகாரணமெனவும் தெரிவிக்கிறார்
கள் இது தான் அனுபவஞானம். கடவுளால் சிருஷ்டி என்ப
தும், ஈஸ்வரனால் ஆளப்படுகிறதென்பதும் கற்பிதங்களென
அறிக. இதுதான் விஞ்ஞான ஆராய்ச்சியால் நமக்கு இதுவரை
யிலும் தெரிந்துள்ள விஷயமாகும்."

பகுத்தறிவாளர்கள் ஆராச்சிசெய்து வெளியிட்டிருக்கும்
கடவுள் இல்லை எனும் நாஸ்திக நூலில், இப்பிரபஞ்ச சிரு
ஷ்டி சுபாவமென்றும், மறுபடி பூதபௌதீக குணங்களே
காரணமென்றும், மீண்டும் இவ்வண்டகோள இயக்க சல
னமே காரணமென்றும், பரமாணுக்கள் காரணமென்றும், அணு
பரமாணுக்களின் சையோகமே காரணமென்றும், அண்
டங்கள் ஒன்றோடொன்று இழுத்து இயங்கும் கவர்ச்சியே
காரணமென்றும், ஜீவசக்தியே காரணமென்றும் கூறப்பட்
டிருக்கின்றன. 'விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள் தங்கள்
ககோள, பூகோள ஆராய்ச்சியில், அவரவர்கள் கண்டவற்
றை வெளியிட்டிருக்கிறார்கள். 'கடவுளும் பிரபஞ்சமும்,
என்னும் நூல் பூராவும் ஆராயின், பிரபஞ்ச சிருஷ்டிக்கு
முதலில் மாலிகூலஸ் என்ற அணுத்திரள்களிலிருந்து பர
மாணுக்கள் உற்பத்தியாயின வென்றும், அப்பரமாணுக்க
ளின் சேர்க்கையால் அணுக்களும், அவ்வணுக்களின் சை
யோகத்தால் சூரிய சந்திர உலக நட்சத்திர கோளங்களா

கிய மகத்துக்களும் உண்டாயின வென்றும், புல்பூடாதி
மனுவர்க்க முதலியனவும் அவற்றிலிருந்தே உற்பத்தியா
யிற்றென்றும் ஏற்படுகிறது. அவ்வாறாய அணுத்திரள்
கள் அசேதனமெனும் ஜடபதார்த்தம் என்பதும் அவர்க
ளின் முடிபு. அவ்வணுத் திரகளிலுள்ள பரமாணுக்கள்
ஒன்றோடொன்று சேர்ந்து அணுக்களாவது ஓர் காரிய
மாகும். அவ்வணுக்களின் சையோகம் மகத்தாகும். அந்த
சையோகமும், ஓர் காரியமாகும். இம்மகத்துகளடங்கிய
சகல கோளங்களும் ஒன்றோடொன்று இழுப்புக் கவர்ச்சி
சக்திகளால் தன் கதியிலமாராது இயங்கிக்கொண்டிருப்ப
தும், அக்கவர்ச்சி சக்திகளும் ஓர் காரியமேயாகும். இவ்
வணுக்கள் பூதங்களாகி, அவைகள் பௌதிகங்களாகி
வியக்தமடைவது பூத பௌதிக குணத்தாலாவதாம். அக்
குணமும், அவ்யக்தங்களும் ஓர் காரியமாகும். மனிதனு
டைய அறிவுக்கு எவ்வளவு விஞ்ஞான விளக்கங்கள்
வெளிப்படுகின்றனவோ, அவையனைத்தும் காரியங்களே
யாம். ஆகவே, இக்காரிய நிகழ்வுகளுக்கு ஓர் காரணம்
வேண்டியது அவசியமாகும். இப்பூதபௌதிக ஆராய்ச்சி
யாளர்கள் இப்பிரபஞ்ச சிருஷ்டிக்கு யாது காரணமெனக்
கண்டுபிடிக்க முயன்று, சூட்சம காரியங்களாகிய சலனம்,
கவர்ச்சி, சையோகம், சம்பந்தம் ஆகியவற்றை காரணங்க
ளெனக் கூறிவிட்டார்கள். அவற்றிற்கு மேல் அவர்கள்
ஆராய்ச்சி பயன் தரவில்லை. சலன முதலிய சம்பந்தங்
களையும், அநுமான யூகத்தால் கூறுகிறார்களேயொழிய
அவைகளைப் பிரத்தியட்சமாய்க் கண்டவர்களுமன்று. சல
னம், கவர்ச்சி முதலிய சக்திகளை, ஜட பதார்த்தங்களை
உணருவதைப்போல் உணரமுடியாது. யுக்தியாலுணரக்
கூடும். இத்தியாதி செயல்களுள்பட்ட சகல சக்திகளும்
காரியமென்பதை இவர்கள் அறிய ஆற்றலற்றவர்களாய்
விட்டதினாலேயே காரணப்பொருளாகிய கடவுள் ஒன்று
இல்லையென்று கூறிவிட்டார்கள். சாதாரணமான அணுத்
திரள்களாக விருந்தமாலிக் கூலஸானது நுண்ணிய வணுக்
களாக பிரிவதை இவர்கள் கண்டுணர்ந்தார்களா? இப்
பூமியிலுள்ள கடின பதார்த்தங்கள், திரவ பதார்த்தங்க
ளாகி அக்னியின் சம்பந்தத்தால் ஆவிரூபமடைந்து அது

வாய்வு சம்பந்தத்தால் அணுத்தன்மையடைந்து மறைந்து
விடுகிறது. இம்மாதிரியான பிரத்தியட்சப் பிரமாணத்
தைக் கொண்டும், லயக்கிரமத்தைக் கொண்டும், இப்பிர
பஞ்ச சிருஷ்டிகளும் ஏற்பட்டிருக்கிறதென அனுமானிக்
கப்பட்டு இவ்விஞ்ஞான சாஸ்திரிகள் தீர்மானத்திற்கு
வந்திருக்கின்றார்கள். இந்து வேதத்தில் எவ்வளவோ
காலத்திற்கு முன்பு கூறியிருப்பதாவது :—“ஒரு களிமண்
கட்டியின் ரகசியத்தை ஆராய்துணர்ந்து விட்டால், பிரதி
வியின் பூரா ரகசியத்தை உணர்ந்தவர்களாவோம்.” என
வே, மேல்நாட்டினர் அனுமானித்து கூறிய முடிவின் பிர
காரம் இத்தூல பிரபஞ்சத்தின் சலனங்களுக்கு சூட்சம
கவர்ச்சி, சையோக, குண, கர்மம் காரணங்களாகவே
வைத்துக்கொள்வோம். இக்கவர்ச்சி சையோக, குண,
கர்மம் இந்த ஜகத்து முழுமையும் இணைத்துக்கொண்டி
ருக்கிறது. அந்த சூட்சம இணைப்பின் சக்தி எதுவோ,
அதை இந்துக்கள் பிராணசக்தி என்று கூறுகிறார்கள்.
இந்தப் பிரபஞ்சத்தில் துண்டுதுண்டுகளாக அங்குமிங்கும்
இயங்கிக்கொண்டிருக்கும் கோளங்களுக்கு சூட்சமத்தில்
வியாபக, சூட்சமகவர்ச்சி சையோகசக்தி ஆகியவை இருப்
பதுபோல் இப்பூவுலகிலுள்ள ஜீவர்களுக்குக்குள்ளும் சூட்
சம கவர்ச்சி, சையோகசக்தி ஆகியவை வியாபித்திருக்கின்
றன. ஜீவர்களுக்குற்ற சூட்சம கவர்ச்சி சையோக சக்தியை
யே அந்தகரணமென்றும், பிராணனென்றும் கூறுவது. விஞ்
ஞான ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கும் அணுத்
திரள்களாகிய மொத்தத்தொகுதிகளே அணுவணுவாய்ப்
பிரிந்து, மீண்டும் ஒன்றோடொன்றுசேர்ந்து அண்டாகாரங்
களாயின. சமஷ்டி அணுத்திரள்களே வியஸ்டியாயிற்
றென்று ஏற்படுகிறதல்லவா? அவ்விஷ்டியில் சமஸ்டி தன்
மை சூட்சமமாக வியாபித்திருப்பது சித்தாந்தமாகும்,
அதுபோல், ஜீவர்களின் வியஸ்டி அந்தகரணத்திற்கு ஆதா
ரமாகிய சூட்சம சமஸ்டியே ஆத்மாவாகும். அவ்வாத்மா
ஜீவவர்க்கங்களில் சேதனத்தன்மையையும், ககோளவர்க்
காதிகளில் அசேதனத் தன்மையையும் அடைந்திருக்கி
றது. இச்சேதனத் தன்மையால் தான் சைதன்யத்தை
யுணரக்கூடும். ககோள பூகோளங்களுக்குப் பகுத்தறிவு

உண்டென்று எந்த விஞ்ஞானியும் கூறுவதில்லை. அக்கோளாதிகளுக்கு தங்கள் சூட்சம பிரதானமாகிய சைதன்யத்தை யறிய விரும்பும் தன்மையுமில்லை. இப்பிரபஞ்சத்தின் கர்த்தாவாகிய சைதன்னியம் தன்னை யுணர்த்துவதற்கு, அணுவிலிருந்து மகத்தாகிய மனுவாதி வர்க்கங்களில் தனது சைதன்ய பிரபையைப் பிரகாசிக்கச் செய்கிறது. அப்பிரகாசம் எங்கு அதிகமாகவும், சுத்தமாகவும் பிரகாசிக்கிறதோ அந்த இடம் தான் மனிதனாகும். இம்மனித வர்க்கம் தனது சைதன்ய பிரகாசத்தை நித்தியம் தனது சுயானுபூதியில் அனுபவித்தும், கடவுள் இல்லையென்று பகுத்தறிவாள மனிதவர்க்கம் கூறுகிறது. பூகோளத்தில் கண்டுணர்ந்த ஆராய்ச்சிப் பிரமாணத்தைக்கொண்டு ககோளங்களில் சலனம், கவர்ச்சி, சையோகம் முதலிய குணங்கள் அனுமானிக்கப் படுகின்றன. அதுபோல் மனிதனுடைய சேதனத்தன்மையால் சைதன்யத்தை யனுபவிக்கும் பிரமாணத்தால் ஏன் ககோளங்களின் கர்த்தாவாகிய சமஷ்டி சைதன்யத்தை அனுமானிக்கலாகாது? விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிப்படி ஒரே அணுத்திரள் பலவித ரூபங்களாகவும், வெவ்வேறு மாறுபட்ட செயல்களாகவும் எப்படி பிரதீதியாகிறதோ, அதுபோல் ஒரே சைதன்யத்தின் பிரதிபிம்பங்களாகிய மனுவாதி சேதன பதார்த்தங்கள் பலவித ரூபங்களையும், வெவ்வேறு மாறுபட்ட செயல்களையும் ஏன் அடையக்கூடாது? எதிர்மறை குணங்களிருப்பதாலேயே, சிருஷ்டி கர்த்தாவை குறைகூறுகிறவர்கள் யாதொரு குணமுமின்றி யிருந்த அணுத்திரள்களில் எதிர்மறை குண கர்ம கவர்ச்சி சையோகங்கள் ஏன் ஏற்பட்டதென்று ஏன் கவனிக்கவில்லை? சுபாவத்திலோ, பூதபௌதீக குணத்திலோ, சலனத்திலோ, கவர்ச்சியிலோ பாரபட்சமுண்டா? கடவுளிடத்தில் பாரபட்சம் காணுபவர்கள் ககோளங்களில் ஏற்பட்டிருக்கும் எதிர்மறை சுபாவங்களின் பாரபட்சங்களை ஏன் சிந்திக்கவில்லை? இத்தியாதி காரணங்களால் கடவுளுக்கும் பிரபஞ்சத்திற்கும் சம்பந்தம் உண்டென்றே ஏற்படுகிறது. பிரபஞ்சத்தின் சாரமாகிய தூசகளின் பரிணாமமாகிய மனிதன் அறிவின்றி, மனமின்றி, சைதன்யமின்றி எப்படி தன் வாழ்க்கையை யனுப

விக்கிருன்? எப்படி தன்னை பகுத்தறிவாளன் என்று கூறிக்கொள்ளுகிருன்? எப்படி இந்திரிய கருவி கரணுதிக ளின் உதவியின்றி அவன் இக்ககோள, பூகோள ரகசியங் களை யுணரும் விஞ்ஞானியாவான்? மனிதனை நடத்துவ தற்கும் மனிதன் வாழ்வதற்கும் அறிவு, மனம், சைதன் யம் ஆகியவை எத்துணை அவசியமோ, அவற்றைப்போல் இப்பிரபஞ்சத்தை நடத்துவதற்கு சமஷ்டிமனமோ, அறி வோ, சைதன்யமோ, ஆகியவை அவசியமில்லையென்று எந்த விஞ்ஞானியும் கூறமாட்டான். ஆதலால் இந்த சிருஷ்டிகள் யாவும் கடவுளால் ஏற்பட்டன வென்பதும், அவைகள் அவராலேயே நிர்வகிக்கப்படுகின்றன வென்ப தும் கீழ்நாட்டு ஆத்ம தத்துவ விஞ்ஞானிகளால் ஏற் பட்ட அநுபவமுடிவாகும்.

## ஒன்பதாவது அத்தியாயம்.

### சநாதன விஞ்ஞான தத்துவம்.

"கடவுளும் பிரபஞ்சமும்" என்னும் நூலாசிரியர் தனது நூலில் கடவுளோ, கர்த்தாவோ இல்லை என்ப தற்கு மேல்நாட்டறிஞர்களின் விஞ்ஞான ஆராய்ச்சியின் ஆதாரங்களைக்கொண்டு நிரூபித்து சகல காரியங்களுக்கும் ஆதாரம் இயற்கை அல்லது சுபாவம் என்று கூறிவிட்டார். அக்கூற்றுகளுக்கெல்லாம், ஒவ்வொரு அத்தியாயத்திலும் தக்கவிடை பகர்ந்து அநேக வினக்களும் விடுத்திருக்கி ருேம். அவ்வினக்களுக்கு ஜடதத்துவ விஞ்ஞான பகுத் தறிவாளர்கள் பிரத்தியட்ச அனுபோகப் பிரமானவாயி லாய் விடைபகர விரும்புகிருேம்.

ஜம்புத் தீபமென்னும் பாதகண்டமாகிய இக்கீழ்த் திசையிலே தோன்றியிருந்த சநாதன விஞ்ஞான அறிஞர் கள், இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி முதலிய ரகசியங்களை தங்கள் மனோதத்துவ அனுபவங்களால் ஆராய்ந்துணர்ந்து வெளியிட்டிருக்கும் விஷயங்களை இங்கு எடுத்துக்காட்டு கிருேம்.

# ஆஸ்திக விஞ்ஞானசாகரம்.

“ சுக்கில எஜுர், வேதத்திலுள்ள, பைங்களோபநிஷத்
தில் கூறியிருப்பதாவது:—இப்பிரபஞ்சம் வியக்தப்படுமுன்
னே ஜீவர்களது உபாதியாகிய அவித்தை ஜீவர்களது கரு
மத்தினுடனே மாயையில் ஒடுங்கி இருந்தது.

ஜீவர்களின் தூக்க அவஸ்தையில் ஜீவர்களின் மனோ
மயப் பிரபஞ்சம் அவித்தையில் ஐக்கியத்தை அடைந்திருப்
பதுபோல, அந்த மாயை பிர்மத்தில் ஐக்கியத்தை அடைந்
திருந்தது. எனவே, சிருஷ்டிக்கு முன்னே சஜாதிய (சம
ஜாதித்தன்மை) விஜாதிய (வேற்றுஜாதித்தன்மை) சுவகத
(அவயவத்தன்மை) பேதமில்லாத ஒரே அத்துவிதிய சச்சி
தானந்த பிர்மமிருந்தது.

அந்த மாயோ பாதியாகிய பிர்மத்துக்கு பிரபஞ்ச
வியக்தமாகிய ஆரம்பத்தில் ஜீவர்களது பரிபக்குவப்பட்ட
கருமத்தின் நிமித்தத்தால் ஒன்றாகிய யான், அனந்தமாவே
னென்ற இச்சையுண்டாயிற்று. அந்த இச்சையினால்
மாயோபாதிகனாகிய ஈசுவரனில் க்ஷோபம் (உபாதையினால்
ஏற்படும் சங்கற்பம்) உண்டாகி கிரமமாய் ஆகாயம்,
வாய்வு, அக்கினி, ஜலம், மண் என்னும் பஞ்சபூதங்களுண்
டாயிற்று.

இக்கருத்துக்களை அந்வயப்படுத்தி “தைத்திரீயம்”
“ஐதரேயம்” “பிரசினம்” “முண்டகம்” “யோக சிகோப
நிஷதம்” முதலிய உபநிஷத்துக்களில் கூறப்பட்டிருப்ப
தாவது. பிரமத்தில் சிருஷ்டிக்குக் காரணம் மாயோபாதி
யாகிய ஈஸ்வரனின் ஈக்ஷணம் அதாவது சங்கற்பம் என்ப
தாகும்.

சூக்ஷ்ம பஞ்சபூதங்கள் வெளிப்படுவதற்கு முன்
அபஞ்சீ கிருதமாயிருந்தன. அவற்றினின்றும் சமஷ்டி
வியஷ்டியாகிய சூக்ஷ்ம சிருஷ்டி உண்டாயிற்று.

பின்னர் ஈஸ்வரனது இச்சையால் அபஞ்சீகரணமுண்
டாயிற்று. அவைகளினின்றும் சமஷ்டி வியஷ்டியாகிய
ஸ்தூல சிருஷ்டி யுண்டாயிற்று. அவற்றில் சமஷ்டி
ஸ்தூல சூக்ஷ்மகாரண பிரபஞ்சத்திற்கு அபிமானி ஈஸ்வர

ளுகும். வியஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம காரண பிரபஞ்சத்திற்கு அபிமானி ஜீவனுகும். அபஞ்சீகரண சூக்ஷ்ம பஞ்சபூதங்களாயிருக்கும் போது, அவற்றிற்கு மகதத்துவம் என்று பெயர். பூதங்கள் பஞ்சசீகரணமான பின் பிரகிருதி யென்று பெயர்.

பஞ்சீகரணமாகும் விபரம் யாதெனில் பஞ்சபூதங்கள் ஒவ்வொன்றும் இரண்டிரண்டு பாகமாகி அவைகள் பத்தாயிற்று. அவற்றில் முதல் ஐந்து பாகங்களையும் நிறுத்திவிட்டு அப்பூதங்களின் மற்ற ஐந்து பாகங்களினின்றும் ஒவ்வொரு பாகத்தையும் நான்கு பாகமாக்கி ஒவ்வொரு பூதங்களின் அரைபாகத்துடன் மற்ற பூதங்களின் அரைபாகத்தில் பிரிந்த அரைக்கால் பாகங்களும் சேர்ந்துளதாகிய பஞ்சபூத சேர்க்கைகளே பஞ்சீகரணமெனப்படும். இப்படி சேர்ந்ததாலாகிய கலப்பு பூதங்களினுலே அனந்தங்கோடி பிர்மாண்டங்களும் அந்தந்த அண்டங்களுக்கு சம்மந்தமாய் அநேக உலகங்களும் அனந்த ஜீவர்களும் சிருஷ்டியாயின. பஞ்சசீகரண மென்பதின் திருஷ்டாந்தம் யாதெனில், இப்பூமியை எடுத்துக் கொள்வோம். இதில் பிருதீவி பூதத்தின் பாகம் பாதியும் மற்ற நான்கு தங்களின் ஒவ்வொன்றின் பாகம் அரைக்கால் பங்கு வீதம் நான்கு பூதங்களின் பாகம் பாதியும் சேர்ந்து மண்ணுலகமாகும் இவ்வாறே மற்ற பூதங்களுடைய பஞ்சீகரணமுமாம்.

பஞ்ச பூதங்களுடைய இரஜோகுண அம்ஸத்தை நான்காகப் பிரித்து மூன்று பாகங்களால் பஞ்சபிராணன்களும் நான்காவது பாகத்தால் பஞ்ச கர்மேந்திரியங்களும் ஏற்பட்டன. பஞ்சபூதங்களின் சத்துவகுண அம்ஸத்தை நான்காகப்பிரித்து மூன்று பாகங்களால் ஐவகை விர்த்திகளையுடைய அந்த கரணங்களும்; நான்காவது பாகத்தினுல் ஞானேந்திரியங்களும் ஏற்பட்டன.

ஜீவர்களுக்கு பஞ்சபூதங்களின் பஞ்சீகரணத்தால் ஏற்பட்ட செயல்கள் அனுபவ வாயிலாய் அனுபவிக்கப் பட்டு வருவதையும் இங்கு எடுத்துக்காட்டுகிறோம்:

சோகம் ஆகாயத்தில் ஆகாய அம்ஸம்.
காமம் ஆகாயத்தில் வாய்வின் அம்ஸம்.
குரோதம் ஆகாயத்தில் தேயுவின் அம்ஸம்.
மோகம் ஆகாயத்தில் ஜலத்தின் அம்ஸம்.
பயம் ஆகாயத்தில் பிருதிவியின் அம்ஸம்.
விரிதல் வாயுவில் ஆகாயத்தின் அம்ஸம்.
ஓடுதல் வாயுவில் வாய்வின் அம்ஸம்.
இருத்தல் வாயுவில் அக்கினியின் அம்ஸம்.
நடத்தல் வாயுவில் ஜலத்தின் அம்ஸம்.
சுருங்குதல் வாயுவில் பிருதிவியின் அம்ஸம்.
நித்திரை அக்கினியில் ஆகாயத்தின் அம்ஸம்.
தாகம் அக்கினியில் வாயுவின் அம்ஸம்.
பசி அக்கினியில் அக்கினியின் அம்ஸம்.
காந்தி அக்கினியில் ஜலத்தின் அம்ஸம்.
சோம்பல் அக்கினியில் பிருதிவியின் அம்ஸம்.
உமிழ்நீர் ஜலத்தில் ஆகாயத்தின் அம்ஸம்.
வியர்வை ஜலத்தில் வாயுவின் அம்ஸம்.
சிறுநீர் ஜலத்தில் தேயுவின் அம்ஸம்.
சுக்கிலம் ஜலத்தில் ஜல அம்ஸம்.
சுரோணிதம் ஜலத்தில் பிருதிவியின் அம்ஸம்.
உரோமம் பிரிதிவியில் ஆகாயத்தின் அம்ஸம்.
தோல் பிரிதிவியில் வாயுவின் அம்ஸம்.
நாடி பிரிதிவியில் தேயுவின் அம்ஸம்.
மாமிசம் பிரிதிவியில் ஜலத்தின் அம்ஸம்.
எலும்பு பிரிதிவியில் பிரிதிவியின் அம்ஸம்.

என்பவனவாகும்.

இவ்வண்ணம் பஞ்சீகரணத்தின் பஞ்சபூததத்துவாம்சங்களை ஜீவர்களின் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களில் இருபத்தைந்து பிரிவுகளாக கூறப்பட்டிருக்கின்றது.

மேற்கூறியவாற்றுல் மகதத்துவமாகிய மாயையினுல் பிரதிபிம்ப ஈஸ்வரனிடத்திலிருந்து அபஞ்சீகிருத பஞ்சபூதங்கள் பஞ்சீகரணப்பட்டு சகல திரிசயங்களாக வியக்தப்பட்டனவென்ற இரகசியங்களை சநாதன அறிஞர்கள் தொன்றுதொட்டே உணர்ந்து வந்திருக்கின்றனர். பஞ்ச

பூதங்கள் பஞ்சீகரண முறையில் கலப்புற்ற உண்மைகளை நிரூபிக்க ஸ்தூல சரீரங்களிலும் அவற்றைச்சார்ந்த அந்த கரணங்களிலும் ஏற்படும் விகாரங்களையும், அவஸ்தைகளையும், அவைகளுக்குக் காரணமாகிய ஒவ்வொரு பூதங்களின் பஞ்சீகரண அம்ஸங்களையும் தெளிவாய் விளக்கியிருக்கிறார்கள்.

சூக்ஷ்மமாய் இருந்தவைகள் ஸ்தூலிக்க ஸ்தூலிக்க ஈஸ்வரனின் பிரகாசம் பிரதிபிம்பிக்க ஏதுவாகிறது. அதுவும் சுத்தமாகிய சேதன பதார்த்தத்தில் பிரதிபிம்பம் தெளிவாக பிரகாசிக்கிறது.

கீழ்நாட்டு சநாதன அறிஞர்கள் மேற்கூறிய தத்துவங்களை தங்கள் அனுபவ வாயிலாய் கண்டுணர்ந்திருக்க, அவர்கள் சந்ததியில் வந்தவர்களாகிய இந்துக்களுக்கு நாஸ்திகப் பகுத்தறிவாளர்கள் ஜடதத்துவ நாஸ்திக விஞ்ஞானம்கூற முற்பட்டது எத்துணை பொருத்தமுடையது என்பதை வாசகர்களே தீர்மானித்துக் கொள்வார்களாக.—சனாதன அறிஞர்களின் ஆராய்ச்சியால் காணப்பட்டவைகளைவிட நவீன ஜடதத்துவ விஞ்ஞானிகள் ஆய்ந்துணர்ந்த முடிவு யாதெனில், பரமாணுக்கள்சேர்ந்து அணுத்திரள்களாகி, அவைகளே இப்பிரபஞ்சமாயிற்று என்பதாகும். அப்பரமாணுக்களை தூசுக்களென்றும், அவைகளினின்றும் மனிதன் முதலிய ஜீவவர்க்கங்கள் வந்தனவென்றும் கூறுகிறார்கள். அவர்கள் அபிப்பிராயம் உண்மையாயின் அத்தூசுக்களாகிய பரமாணுக்களுக்கு பரிணாமகுணம், பரிமாணகுணம், வேற்றுமை குணம், சையோககுணம், வியாபககுணம், பரத்வ அபரத்வகுணம், சிநேககுணம், சத்தம், புத்தி, சுக, துக்க, இச்சை, துவேஷம், முயற்சி, தர்ம, அதர்ம, சமஸ்கார முதலிய குணங்களும், பரமாணுக்கள் சலனத்தை யடைந்து மகத்தாகி பிரபஞ்சமாகும் கர்மமும், எப்படி வந்தது என்று கேட்டால், அந்நாஸ்திக விஞ்ஞானிகள் சரியான விடை பகருவதில்லை. தூசுக்களாகிய பரமாணுக்களின் காரணத்திலில்லாத குண, கர்ம, சுபாவம், காரியமாகிய பிரபஞ்சத்தில் நிகழ்வது நியதிவிரோதமாகும்.

அப்பரமாணுக்கள் குண, கர்ம, சுபாவத்துடன் பிரபஞ்சமாக பரிணமிப்பது இயற்கை அல்லது சுபாவம் என்று ஏதோ ஒன்றை அவ்விஞ்ஞானிகள் கூறிவிடுகிறார்கள். அப்படிக் கூறுவதும் அவர்களின் ஆராய்ச்சி யறிவிற் கேற்ற சுபாவமேயாகும். அப்பரமா ணுக்களாகிய தூசுகள் இயற்கையாகவே மாறாமல் லயக்கிரமப்படி பரிணமத்தை யடைந்து மீண்டும் வேறுகுண, கர்ம, சுபாவங்களை அடைவானேன்? அத்தூசுக்களாகிய பரமாணுக்கள் இப்பூமியிலு மிருக்கின்றன. அவைகள் லயக்கிரம பரிணமமின்றி புல் பூடாதி மனுவர்க்கங்களாக ஏன் ஆகக் கூடாது?

இவ்வளவு ஆக்ஷேப சம்சய விபரீதங்களுக்கு இடமில்லாத உண்மை தத்துவங்களை, சநாதன அறிஞர்கள் கண்டுணர்ந் திருந்தார்கள். அவர்கள் உணர்ந்த உண்மை யாதெனின்; தூசுக்கள் என்று கூறப்படும் பரமாணுக்கள் யாவும் பிருதிவியின் அம்சங்களென்றும், அவைகள் லயக்கிரமப்படி தன் சுயரூபத்தை விட்டு சூக்கும சமஸ்காரத் தன்மையை யடைந்து அரூபநிலை யெய்தி அகண்டாகார ஏகப்பொருளுடன் ஐக்யமாய்விடுகிறது. அந்நிலையுற்ற பூதங்களின் சமஸ்காரங்கள் அந்தர்விர்த்தியினின்று அபிவிர்த்தி யடையுங்கால் அவ்வகண்டாகார வஸ்துவின் ஏகதேசத்தில் பிரபஞ்சமாக வியக்தமாகிறது. இக்கிரமம் தான் உண்மையான விஞ்ஞானமே ஒழிய பிருதிவியின் அம்சமாகிய தூசுக்கள் பிரபஞ்சமாவது என்பது அறியாமையே யாகும். இவை நிற்க வேதாந்திகள் சிருஷ்டியைப்பற்றி கூறும் விஷயங்களாவது யாதெனில், பரமாத்மா இயல்பாகவே சித்தாகவும், மாயையோடு கூடுவதினால் அந்தர்யாமியாகவும், சூக்ஷ்ம சிருஷ்டியினால் சூத்திராத்மாவாகவும், ஸ்தூல சிருஷ்டியினால் விராட்டாகவு மிருக்கிறது. இந்த ஜகத்து ஆனந்தத்தினின்றே உண்டாயிற்று. ஆனந்தத்திலேயே நிலைத்திருக்கிறது. ஆனந்தத்திலேயே ஒடுங்குகிறது.

பிர்ஹமத்தின் இலக்ஷணமாகிய ஆனந்தத்திலும் ஜகத்துவேறன்று, குடத்திற்கு மண் எப்படி உபாதான

காரணமோ, அதுபோல் இந்த ஜகத்திற்கும் ஆனந்தம் உபாதான காரணமாயிருக்கிறது. அவ்வுபாதான காரணங்களும் விவர்த்தம், பரிணாமம், ஆரம்பம் என்ற பேதங்களால் மூவகைப்படும். இம்மூன்றுவித காரணங்களில் ஆரம்ப வாதிகளாகிய வைசேஷிகர் முதலியோர் நூலினின்று திரை உற்பத்தியைப்போல் இச்சகத்து ஆகாசாதி பஞ்சபூதங்களினின்று உற்பத்தியாயிற்று என்று கூறுகிறார்கள். பரிணாம வாதிகளோ இப்பூதங்கள் தனது சொரூப அவஸ்தையை விடுத்து வேறு தன்மையை யடைந்து பால் தயிராவதுபோல் பிரபஞ்ச மாயிற்றென்று கூறுகிறார்கள்.

பழுதையில் பாம்பின் கற்பித தோற்றம் எப்படியோ அதுபோல் விவர்த்தம் என்பதாகும். அவ்விவர்த்தமாகிய கற்பிதமாவது நிரம்சமான ஆகாயத்தில் ஸ்தலத்தன்மையும், கீழ்நோக்கான நீலவர்ணமுடைய கொப்பரைக்கு சமானமானத் தன்மையும் ஆகாயத்தின் சொரூபத்தை அறியாத புருடர்களால் எப்படி கற்பிக்கப்படுகிறதோ, அதுபோல் அத்வீதிய பரபிரஹ்மத்தில் ஜகத்தின் சிருஷ்டியாதிகள் பிரஹ்மத்தின் சொரூபத்தை அறியாத புருடர்களால் கற்பிக்கப்படுகிறது. அப்பிரஹ்மத்தில் கற்பிதமாகிய மாயாசக்தியே ஜகத்தின் கற்பனைக்கு காரணமாகிறது. இந்திர ஜாலத்தினை யறிந்த புருஷனிடத்துற்ற மணிமந்திராதி வடிவ மாயாசக்திக்கு கந்தர்வநகர முதலியவற்றை கற்பிக்கும் சக்தி யிருப்பதுபோல, மாயாசக்தியே பிரஹ்மத்தில் பிரபஞ்சாதி முதலிய கற்பிதங்களுக்கு காரணமாகும். இச்சக்தி தனது காரியவடிவ ஜகத்தினும் தனது ஆசிரயமாகிய பிரஹ்மத்தினும் விபரீத சுபாவமுடையதாயிருக்கிறது.

அக்கினியிலுள்ள சக்தியின் காரியமாகிய பொரிகளும், ஆசிரயமாகிய நெருப்புமாகிய இரண்டும் பிரத்தியட்ச பிரமாணத்தினால் அறியதக்கதாம். அக்கினிசக்தியோ காரிய வடிவ ஏதுவால் அனுமானிக்கப்படுகிறது. ஆதலால் அவ்வக்னியின் சக்தியானது காரியம் ஆசிரயம் எனும் இரண்டிற்கும் விலக்ஷணமாயிருக்கிறது. அதுபோல் மாயாசக்தி

யும் விலக்ஷணமாயிருக்கிறது என்பதாகும். ஆகையால் அச் சக்தி சிந்திக்கத்தகாததாம். எவ்வாறு எனின், அச்சக்தி பேதமாகவாவது அபேதமாகவாவது எவ்வித வடிவமாக வாவது யிருப்பதாக சொல்லுதற்குரியதன்று. எனவே பிரபஞ்சசிருஷ்டி அநிர்வசனீயம் என்று கூறப்படுகிறது.

இவ்வாறு பிரஹ்மத்திலுள்ள சிந்திக்கக்கூடாத சக்தி யாகிய மாயை அவ்வியாகிருதமெனப்படும். அம்மாயை யின் முதல் விகாரமாகிய காரியம் ஆகாசமாம். அவ்வா காசம் சத், சித், ஆனந்த வடிவமாம். அவ்வாகாயத்தின் தன் சொந்த வடிவம் அவகாசமாம். அவ்வவகாசம் மித் தையாகும். சத் சித் ஆனந்த வடிவம் மித்தையன்று; வாஸ் தவமாம். ஆகாயத்தின் சொந்த வடிவமாகிய அவகாசம் மித்தை என்பது எவ்வாறெனின், ஆகாயம் வெளிப்படு வதற்கு முன்னும் மறைதலாகிய பின்னும் சொந்த வடிவ மாகிய அவகாசமில்லாதிருந்தது; ஆகையால் மித்தையா கும். எந்த வடிவம் ஆதியிலும் அந்தத்திலுமில்லையோ அவ்வடிவம் வர்த்தமான காலத்தில் தோற்றினும் இல்லை என்றே நிக்ஷயிக்கவேண்டும். ஆகாயத்தின் சொந்த வடிவ மாகிய அவகாசத்தை நீக்கின், அவகாசமின்றிய நிஜாத்மா வின் சச்சிதானந்த அனுபவமுண்டாகிறது. உதாசீனத் தன்மையால் அது சுகவடிவமாகும். அனுகூலத்தன்மை பிரதிகூலத்தன்மையின்றி யிருப்பதே நிஜாத்ம சுகமாகும். எவ்வளவுக்கெவ்வளவு நாமரூபங்களின் விடுதல் உண்டா கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அந்த பிர்ஹமத்தின் தரி சனமுண்டாகிறது. எவ்வளவுக்கெவ்வளவு அப்பிரஹமம் காணப்படுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு நாமரூபங்களி ரண்டையும் விடுகிறான். எப்படி ஜீவர்களிடத்துள்ள நித் திரா சக்தியானது நிகழ்தற்கரிய சொற்பனத்தினை செய்வ தாயிருக்கிறதோ, அதுபோல் இந்த பிர்ஹமத்திலுள்ள மாயா சக்தியானது ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயங்களை செய்வதாயிருக்கிறது. எப்போது நித்திராசக்திக்கு இத் தன்மைய மகிமை ஏற்பட்டதோ, அப்போது மாயாசக் திக்கு இச்சிந்திக்கக்கூடாத (அநிர்வசநீய) மகிமையுளது என்பதில் என்ன ஆச்சரியம். இவ்வாறு பிரபஞ்சத்தின்

அநிர்வச நியத்தன்மையை வேதாந்திகள் கூறியிருக்கின்றனர். ஜடதத்துவ ஆராய்ச்சிமலிந்த இக்காலத்தில் மேல்நாட்டு கலாசாலை கல்வி அறிவுடன்கூடிய மக்கள் அனேகர் இத்தமிழ்நாட்டிலே "நாஸ்திக" வாதங்கள் புரிந்து வருகின்றனர். அவர்கள் வினவும் வினாக்களாவது; "கடவுள்" என்பது யாது? கடவுள் எங்கிருந்து உலகைப் படைத்தார்? எதற்காகப் படைத்தார்? எப்போது படைத்தார்? பரிபூர்ண கடவுளால் படைக்கப்பட்ட உலகம் அபரிபூரணமாயிருப்பதற்கு காரணமென்ன? என்றும் இன்னும் பலவிதமான தர்க்கவாதங்களும் புரிந்துவருகின்றனர். அத்வைத மதம் எழுச்சியடைந்திருந்த அனேகவாயிர வருஷங்களுக்கு முன்பே இவ்விந்தியாவில் "சார்வாகர்கள்" என்ற நாஸ்திக வாதிகளிருந்தார்கள். அவர்களும் மேலே கண்டவாறு அநேகவிதமான "நாஸ்திக" பிரச்சினைகள்செய்து வாதம் புரிந்துகொண்டிருந்தனர். அவர்களுக்கு அந்தக் காலத்திலேயே தக்கவிடை கூறப்பட்டிருக்கின்றன. அவையாவன; கடவுள் எங்கிருந்து உலகைப் படைத்தாரென்றால் "கடவுள்" சர்வ பிரபஞ்சத்துள்ளும் வியாபித்தும், பிரபஞ்சாதீதமாக வியாபகமாகியுமிருந்தும் தனது அகண்டாகார ஏகதேசத்தில் பிரபஞ்சத்தை சிருஷ்டித்தாரென்றும்; எதற்காகப் படைத்தாரென்றால், தனது சேதனபிரபை பரபஞ்சத்தில் பிரதிபலித்து அப்பிரபைகள் சேதனத்தன்மையுடன்கூடி நிகழ்த்தும் லீலையின் பொருட்டேயென்றும்; எப்போது படைத்தார் என்பதற்கு பிரபஞ்ச சிருஷ்டிக்கு காலவளவில்லை அது அநாதியென்றும், பரிபூரணக்கடவுளால் அப்பரிபூரணம் ஏற்பட காரணமென்ன வென்பதற்கு பிரபஞ்சமும் பரிபூரணமே ஒழிய அபரிபூரணமல்ல வென்றும், பரிபூரணமான வஸ்துவில் பிரதிபலிக்கும் பிரபையாகிய திருசியம் எப்படி அபரிபூரணமா யிருக்குமென்றும் தர்க்கரீதியாய் பிரமாணங்களுடன் நிரூபித்து அச்சார்வாகர்களின் கொள்கைகளை நிராகரித்திருக்கிறார்கள்.

இப்பிரபஞ்சத்திலுள்ள புல்பூடாதி ஜீவவர்க்கங்கள் ஒவ்வொன்றினின்றும் அனேக வர்க்கங்கள் வெளிப்படு

கின்றன. அச்சீவவர்க்கங்கள் தம்தம் சந்ததிகளை எங்கிருந்து? எப்படி? எதற்காக? சிருஷ்டித்தது என்று கேட்பது ஞாயமாகுமா? மிருகாதி பறப்பன ஆகியவைகள் தங்கள் தங்கள் வர்க்காபி விர்த்திக்கு காரணமாகிய "காமம்" அவைகளுக்கு எங்கிருந் துண்டாயது? எதற்காக உண்டாயது? எப்படி உண்டாயது என்று கேட்டால் கடவுள் சிருஷ்டியைப்பற்றி கேள்வி கேடபவர்கள் யாது பதில் கூறக்கூடும்? மனிதவர்க்கங்களுக்கு பிரஜா விர்த்திக்குக் காரணமாகிய காம சங்கற்பம் எங்கிருந் துண்டாயிற்று? ஏன் உண்டாயிற்று? எப்போது உண்டாயிற்று என்று வினவினுல் நாஸ்திக மனிதவர்க்கம் யாது விடை பகர முடியும்?

மனிதன் முதல் ஜீவவர்க்கங்களின் வர்க்காபி விர்த்திக்குக் காரணமாகிய காமசங்கற்பங்கள் அனுதியிலிருந்து தொடர்ந்து நிகழ்ந்து வருகிறதென்று விடை பகரலாமே ஒழிய ஓர் காலத்தை குறிப்பிடல் முடியாது. அக்காம சங்கற்பங்களும் எங்கிருந்துவந்ததென்று ஆராய்ச்சி செய்யின் சர்வத்திற்கு மாதாரமாகிய பரவஸ்துவிலிருந்து வந்ததென்று ஏற்படுமேயொழிய வேறு இடங்காண வியலாது. ஏன் சந்ததிவிர்த்தியாயிற்று என்ருல் உலகைப் பிரகாசிக்க ஏற்பட்டதென்று கூறலாமே ஒழிய வேறு வகையில்லை.

இச்சீவர்கள் அநாதி சங்கற்பமாகிய காம இச்சைகளை நிவர்த்திக்கவும், வர்க்காபி விர்த்திகளை தடைசெய்யவும் ஏன் முடியாமலிருக்கிறதோ, அக்காரணத்தால் பிரபஞ்ச சிருஷ்டிகளும் நித்தியநடையாகவே நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. அந்நடைகளும் அந்தர்விருத்தி அபிவிருத்தியெனும் சங்கோச விகாச முறையில் நடைபெறுகின்றன. எனவே இப்பிரபஞ்ச சிருஷ்டி ஆதியந்தமற்றது என்று கூறப்படுகிறது. இப்பிரபஞ்சம் அனேக இலட்சவருஷங்களுக்கு முன் சிருஷ்டிக்கப் பட்டதென்று சிலரும், 5000, 6000, வருஷங்களுக்கு முன் படைக்கப்பட்ட தென்று சிலரும் இன்னம் பலவிதங்களாக கூறப்படுபவைகளனைத்தும் அவரவர்களின் கல்விகேள்விகளுக்கு தக்க அபிப்பிராயங்களாகுமேயன்றி உண்மை முடிபன்று.

பரிபூரண பதார்த்தத்தில் தோன்றுபவைகள் அபரிபூரணத்துவ மாயிருப்பது நியதியன்று.

சிருஷ்டிகள் யாவும் கடலில் அலைகள் தோன்றுவதும் மறைவதும் போன்றனவாகும். கடலில் அலைகள் எழும்போது அடுத்தாற்போல் அதற்கு தக்கபடி தணிவு ஏற்படுகிறது. அவ்வலைகள் மறையுங்கால் அத்தணிவுகள் நிமிர்ந்துவிடுறது. இந்நிகழ்வுகளால் அக்கடலினுள்ள அலைகளுக்கு அபரிபூரணத்துவம் எப்படி கூறக்கூடும்? அதுபோல் இப்பிரபஞ்சம் விகாசமடையுங்கால் அபிவிர்த்தியும், சங்கோசமாகுங்கால் அந்தர் விர்த்தியுமாகிறது. அவ்யக்தமாகும் பிரபஞ்சம் அந்தர்விர்த்தி வாயிலாய் வேறோர் பக்கம் வியக்தமாகிறது. இக்காரணங்களால் சிருஷ்டிகளுக்கு அபரிபூரணத்துவம் எப்படி கூறக்கூடும்?

"சுவாமி விவேகானந்தர்" அமெரிக்காப் பிரசங்கத்தில் சிருஷ்டியைப்பற்றி கூறியிருப்பதாவது.—

"கடலில் ஒரு அலை கிளம்புகிறது; இன்னொன்று வீழ்கிறது; மறுபடியும் கிளம்புகிறது; மறுபடியும் வீழ்கிறது. ஒவ்வொரு அலைக்கும் பொந்துண்டு. ஒவ்வொரு பொந்துக்கும் அலையுண்டு.

பிரபஞ்சம் முழுதும் ஒரே மாதிரியாயிருப்பதினாலே, அதே நியதிதான் பிரபஞ்சமுழுதுக்கும் செல்லவேண்டும்.

சூரியனும், சந்திரனும், நக்ஷத்திரங்களும், பூமியும், சரீரமும், மனமும், இந்த ஜகத்திலேயுள்ள ஒவ்வொன்றும், அவற்றின் சூக்ஷமகாரணங்களுக்கு திரும்பிவரவேண்டும். மறைந்துவிடவேண்டும். அழிந்துபோனது போலவேயாகவேண்டும். ஆனால் அவைகள் காரணங்களிலேசூட்சம வடிவங்களில் இருந்தன. இந்த சூட்சம வடிவங்களிலிருந்து அவைகள் மறுபடியும் புதியபூமிகளாகவும், சூரியர்களாகவும், சந்திரர்களாகவும் வெளிக்கிளம்பும். இந்த எழுச்சியையும் வீழ்ச்சியையும்பற்றி அறிந்துகொள்வதற்கு இன்னொரு விஷயமுண்டு. வித்து, விருக்ஷத்திலிருந்துண்டாகிறது. அது உடனே விருக்ஷமாகிறதில்லை. ஆனால்

சுறுசுறுப்பற்று வெளிப்படாத மிகவும் சூக்ஷ்மமான செய்கையிலே கொஞ்சகாலமிருக்கிறது. விதையானது பூமிக்குள்ளே கொஞ்சகாலம் வேலை செய்யவேண்டி யிருக்கின்றது. அது துண்டு துண்டாக உடைந்து அழிந்ததுபோலாய் விடுகிறது. அந்த அழிவிலிருந்து புனர் உத்தாரணம் உண்டாகிறது. ஆரம்பத்தில் இந்த பிரபஞ்ச முழுதும் கொஞ்சகாலத்துக்கு அந்த நுட்பமான வடிவத்திலே எவருக்கும் தெரியாமல் வெளிப்படாமல் வேலைசெய்ய வேண்டியிருக்கிறது. அதிலிருந்து ஒரு புதிய சிருஷ்டியுண்டாகிறது. இந்தப்பிரபஞ்சத்தின் ஒரு வெளிப்பாட்டினுடைய காலமுழுதும் அது சூக்ஷ்ம வடிவமடைவதும், அங்கே கொஞ்சகாலமிருப்பதும், மறுபடியும் வெளியே வருவதும், சமஸ்கிருதத்தில் "கல்பம்" என்று சொல்லப்படும். சூக்ஷ்மவடிவங்கள் மெல்ல மெல்ல மென்மேலும் ஸ்தூலமாவதை நாம் பார்க்கின்றோம். காரணமும் காரியமும் ஒன்றே என்பதை நாம் பார்த்துவிட்டோம். காரியமாவது இன்னொரு வடிவத்திலே காரணமேயாம். ஆகையால் இந்த பிரபஞ்ச முழுதும் பாழிலிருந்து உண்டுபண்ணப் படமுடியாது. காரணமின்றி ஒன்றும் உண்டாகிறதில்லை; காரணமே இன்னொரு வடிவத்தில் காரியமாம்."

இத்தியாதி சிருஷ்டி நிகழ்வுகளும் மானவஜாதியின் மனோமயப் பிரபஞ்சத்தின் சொற்பனமே ஒழிய வாஸ்தவமன்று. இச்சிருஷ்டிக்கு காரணமும் மாயோபாதிகனாகிய ஈஸ்வரனுடையதே ஒழிய பரமார்த்த அகண்டாகார பரபிரஹ்மத்தினுடையதுமன்று. இதுவே அத்வைதிகளின் சித்தாந்தமாகும். ஆகவே சர்வத்திற்கும் ஆதாரமான கடவுள் எப்படி இருக்கிறார் என்றால்.—

சுலோகம்.

"நசோர்த்துவம், நசோதா, நசாந்தர்,
நபாஹ்யம் நமத்தியம், நதிர்யங், நபூர்வாபாரதிக்
வியத்வியாபகதவா, அகண்டைக ரூபஸ்,
தத்தேகோ வசிஷ்ட சிவ கேவலோஹம்.

என்பது வேதத்தின் மூலமந்திரமாகும்.

பரிபூரண பதார்த்தத்தில் தோன்றுபவைகள் அபரிபூரணத்துவ மாயிருப்பது நியதியன்று.

சிருஷ்டிகள் யாவும் கடலில் அலைகள் தோன்றுவதும் மறைவதும் போன்றனவாகும். கடலில் அலைகள் எழும்போது அடுத்தாற்போல் அதற்கு தக்கபடி தணிவு ஏற்படுகிறது. அவ்வலைகள் மறையுங்கால் அத்தணிவுகள் நிமிர்ந்துவிடுறது. இந்நிகழ்வுகளால் அக்கடலிலுள்ள அலைகளுக்கு அபரிபூரணத்துவம் எப்படி கூறக்கூடும்? அதுபோல் இப்பிரபஞ்சம் விகாசமடையுங்கால் அபிவிர்த்தியும், சங்கோசமாகுங்கால் அந்தர் விர்த்தியுமாகிறது. அவ்யக்தமாகும் பிரபஞ்சம் அந்தர்விர்த்தி வாயிலாய் வேறோர் பக்கம் வியக்தமாகிறது. இக்காரணங்களால் சிருஷ்டிகளுக்கு அபரிபூரணத்துவம் எப்படி கூறக்கூடும்?

"சுவாமி விவேகானந்தர்" அமெரிக்காப் பிரசங்கத்தில் சிருஷ்டியைப்பற்றி கூறியிருப்பதாவது.—

'கடலில் ஒரு அலை கிளம்புகிறது; இன்னொன்று வீழ்கிறது; மறுபடியும் கிளம்புகிறது; மறுபடியும் வீழ்கிறது. ஒவ்வொரு அலைக்கும் பொந்துண்டு. ஒவ்வொரு பொந்துக்கும் அலையுண்டு.

பிரபஞ்சம் முழுதும் ஒரே மாதிரியாயிருப்பதினாலே, அதே நியதிதான் பிரபஞ்சமுழுதுக்கும் செல்லவேண்டும்.

சூரியனும், சந்திரனும், நக்ஷத்திரங்களும், பூமியும், சரீரமும், மனமும், இந்த ஜகத்திலேயுள்ள ஒவ்வொன்றும், அவற்றின் சூக்ஷ்மகாரணங்களுக்கு திரும்பிவரவேண்டும். மறைந்துவிடவேண்டும். அழிந்துபோனது போலவேயாகவேண்டும். ஆனால் அவைகள் காரணங்களிலேசூட்சம வடிவங்களில் இருந்தன. இந்த சூட்சம வடிவங்களிலிருந்து அவைகள் மறுபடியும் புதியபூமிகளாகவும், சூரியர்களாகவும், சந்திரர்களாகவும் வெளிக்கிளம்பும். இந்த எழுச்சியையும் வீழ்ச்சியையும்பற்றி அறிந்துகொள்வதற்கு இன்னொரு விஷயமுண்டு. வித்து, விருக்ஷத்திலிருந் துண்டாகிறது. அது உடனே விருக்ஷமாகிறதில்லை. ஆனால்